# ಧರ್ಮಗಿರಿ ಸದಾನಂದ ವರ್ಣನೀ ಸಭಾ

## ಮೇಲುಕೋಟೆ,

## ಲೈಬ್ರರಿ ನಿಬಂಧನೆಗಳು.

ಬುಕ್ಕು ನಂಬರು.        ಕ್ರಯ. ರೂ

ಪುಸ್ತಕದ ಹೆಸರು.

1. ಪುಸ್ತಕವನ್ನು ತೆಗೆದು ಕೊಂಡು ಹೋಗುವವರು ಅದರ ಬೆಲೆಯನ್ನು ಅಡ್ವಾನ್ಸ್ ಇಡತಕ್ಕದ್ದು.
2 ಯಾವ ಪುಸ್ತಕವನ್ನೂ ಮೂರು ದಿವಸಕ್ಕಿಂತ ಹೆಚ್ಚು ತಮ್ಮಲ್ಲಿ ಇಟ್ಟು ಕೊಳ್ಳಕೂಡದು.
3 ಪುಸ್ತಕವನ್ನು ಪರಸ್ಥಳೀಯರಿಗೆ ಕೊಡಲಾಗುವುದಿಲ್ಲ.
4 ಪುಸ್ತಕವನ್ನು ಹರಿದಾಗ್ಯೂ ಯಾ ಹಾಳುಮಾಡಿದಾಗ್ಯೂ ಹೊಸಪುಸ್ತಕವನ್ನಾಗಲಿ ಯಾ ಕ್ರಯವನ್ನಾಗಲಿ ಕೊಡಬೇಕಾಗಿರುತ್ತದೆ.

ஸ்ரீ

சர்வம்

விஷ்ணுமயம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

திருமலையென்னும்

# திருப்பதிவேங்க[illegible]ர்

# மஹாத்துவம்

இஃது

ஆஸ்திகமதம், மதவிருக்ஷம்

முதலான கிரந்தங்களின் கர்த்தரும்,

கோயமுத்தூர் கலாநிதி பத்திரிகாசிரியருமாகிய

சேலம், பகடால

## நரசிம்மலு நாயடு

அவர்கள் இயற்றியது.

கோயமுத்தூர்:

கலாநிதி முத்திராக்ஷரசாலை.

1884.

விலை - அணா - 4.




ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீ திருப்பதி வேங்கடேசர் மஹத்துவம்.

## பூர்வஸ்திதி.

ஸ்ரீமத் பரதகண்டத்திற்கு தக்ஷணபாகத்திற்சிறந்து பிரகாசிக்கும் சென்னையம்பதிக்குவாய்வுதிக்காக பனிரெண்டுகாத தூரமாகி, கிருதயுகத்தில் விருஷபகிரியெனவும், திரேதாயுகத்தில் அஞ்சனாத்திரியெனவும், துவாபரயுகத்தில் சேஷகிரியெனவும், கலியுகத்தில வேங்கடகிரியெனவும், இந்நாமங்களினால் பெயர்வழங்கி, தத்காலத்தில் சமஸ்தஜனங்களாலும் சாதாரணமாக ஆந்திர திராவிடபாஷைகளில் திருப்பதி யென்றும், திருமலை யென்றுஞ் சொல்லப்பட்ட ஓர் பர்வதம், தென்வடலாக முப்பது காத நீளமும், கிழக்குமேற்காக மூன்றுகாத அகலமும் பொருந்தி, ஆதியில் ஸ்ரீஅலமேலு மங்கையுடன் கூடி ஸ்ரீவேங்கடேசுவர ஸ்வாமி வசித்திருக்குங் கோவிலினாலும், மத்தியில் இலக்ஷுமி ஸமேதராக நரசிம்மமூர்த்தி நிவஸித்திருக்கும் அஹோபில மென்னும் புண்ணிய க்ஷேத்திரத்தினாலும், அந்தியத்தில் பிரமராம்பிகா ஸஹிதராக மல்லிகார்சன ஸ்வாமி பிரகாசித்திருக்கும் ஸ்ரீசைலமென்னும் சிவக்ஷேத்திரத்தினாலும், அலங்கிருதமாகி வராஹக்ஷேத்திரமென புராணபிரசித்தமாக வழங்கப்பட்டு வருகின்றது.

### இதை கிருதயுகத்தில் விருஷபாத்திரி யென்பதற்குக் காரணம்.

கிரதயுகத்தில் விருஷபாசுரன் என்னுமிராக்ஷதன் ஸ்ரீமஹாவிஷ்ணுவுடன் தான் யுத்தஞ்செய்து அந்த யுத்தத்தில் ஸ்வாமியாற் கொல்லப்பட்டு

பரமபதமடையலாமெனக்கருதி, அந்தப் பர்வதத்தின மத்தியபாகத்திலுள்ள அஹோபிலக்ஷேத்திரதிற்குச்சென்று, அவ்விடமிருக்கும் வராஹதீர்த்தத்தில ஸ்நானஞ்செயது, அததீரத்தத்தில் நிததியமும் நரசிம்மமூர்ததியை ஆராதிதது கட்கததினல் தன்சிரசைச் சேதித்தும், ஸ்வாமி பாதாரவிந்தததில ஸமர்ப்பித்தும் நாட்டியமாடி ஸ்வாமிக்கு ஆனந்தமுண்டாக்கி, மறுபடி தன் சிரசைப் பெற்றுக்கொண்டும், இவ்விதமாக நிததியமுந் தபோநிஷ்டனுகவிருக்கையில், அவனசிரசில் தபோக்கினி ஜுவாலை உண்டாகி உலகங்களை தஹிதது க்கொண்டு வந்ததினல, அப்போது ஸமஸ்த தேவர்களும் அநத அககினி ஜுவாலயைப்பொருக்கமாட்டாமல் பிரம்மாவினிடஞ்சென்று, அவருடன் அந்த இராக்ஷதன் விருததாந்தத்தைச் சொல்லுகையில் அவருக்கொன்றுந்தோன்ருமையால், அததேவர்களுடன் தானும் ஸ்ரீமந்நாராயணரிடத்திற்குச சென்று, அவரை நமஸ்கரித்து துதிதது, சுவாமி ! பூலோகததிலிருக்கும் வராஹ க்ஷேததிரததில் விருஷபாசுரன் கோர தபம் புரிகின்றனன், அவன் தபம் நிறைவேறினல், சகல உலகங்களும் நசித்து விடுமாதலால், தாம் அவ்வசுரனைக் கொலலவேண்டுமென வேண்டிக்கொள்ள, பக்த இராக்ஷகாரன் பகவான்: பிரம்மாவின் வேண்டுகோளுக கிரங்கி, ஓய் பிரம்மாவே! நாமந்த இராககதனை உமது கோரிக்கையின்படியே சங்கரிக்கிருேமென மொழிந்து, அவரை சத்தியலோக மனுப்பிவிட்டு தாம் அந்தர்த்தானமாய் விட்டனர்.

அநந்தரம் அஹோபிலக்ஷேத்திரத்தில் நரசிம்மஸ்வாமியை ஆராதித்து கொண்டிருக்கிற அவ்வரக்கனுக் கொருநாள் பிரசன்னராகி, ஓய் அரக்கனே! உன் கோரிக்கைகள் யாவை? கேளும் தருகிருேமென மொழிய, அவ்வரக்கனகேட்டு: ஸ்வாமி! அடியேனுக்கு தங்களனுக்கிரஹத்தால் சகலசம்பத்துகளுமுண்டாயிருக்கின்றன. ஆனுலிப்போ தெனக்கு வேண்டிய வரமென்னவெனில், தாங்களென்னுடன் போற்செய்யவேண்டிய வர மெனக்களிக்க விரும்புகிறேனென, அந்தப்பகவான் கேட்டு. அப்படியே செய்யககடவோமென வரமளிதது, அவ்வரக்கனுடன் போற்புரிந்திருக்கையில், அவன் தன் மாய்கையினுல், அநேக இரதஙகளையும், அசுவங்களையும், கஜங்களையு முண்டுபண்ணிக்கொணடு, அந்தச் சேனைகளுடன் வந்தனன்; அப்போது, சுவாமியும் அரக்கனுமாக அதிககாலம் யுத்தஞ்செய்து, கடைசியில் ஸ்வாமியானவர். விருஷபாசுரனை நோக்கி, அடா அசுரனே! இனிமேல் நம்முடைய சுதர்சன மென்னும் சககிரத்தால், உனது சிரசைக கண்டித்து விடுகிருேமென் றுரைததுக்கொண்டு கரத்தில சக்கிரமேந்துகையில், அவ்வரக்கன் கண்ணுற்று எம்பெருமானை பலவாறு துதிசெய்து, ஸ்வாமி! பூர்வத்தில், ஹிரணியாக்ஷன், ஹிரணியகசிபு முதலான அரக்கர்கள் தமமுடைய சக்கிரத்தினல் சங்கரிக்கப்பட்டு முக்தியடைந்தனர்க ளாதலால், யானு மப்படியே தமது சககிரத்தால் மிருதியுண்டு, 'பரமபதமடைகிறேனென மொழிந்து மறுபடியும் ஸ்வாமி! நான் இப்பர்வதத்தில் தவஞ்செய்துவந்தமையால் இது

முதல் இப்பர்வதம் என் நாமதேயத்தால் பெயர்வழங்கப்பட வேண்டுமென்று பிரார்த்திக்கையில், பகவானு மப்படியே அனுக்கிரஹஞ்செய்து அவ்வசுரனைச் சங்கரித்து முக்திகொடுத்துவிட்டனர். அன்றுமுதல் அப்பர்வதம் விருஷபாசலமென வழங்கப்படுகின்றது.

## இதை திரேதாயுகத்தில் அஞ்சனாசலமென்பதற்குக் காரணம்.

திரேதாயுகத்தில் கேசரியென்னும் வானர சிரேஷ்டனுக்கு அஞ்சனாதேவியென்னு மொருபத்தினி யிருந்தனள். அவளநேக பர்வதங்களிலும், வனங்களிலும், தனபதியுடன்கூடி கிரீடித்துக்கொண்டிருந்து ஒருநாள தனக்கு புத்திரனில்லாமல் போய்விட்டதென துயரமேறக்கொண்டு, ரிசியமூக மென்னும் பர்வதத்திற்குச் சென்று, அவ்விடத்தில் தபமாசரித்துக்கொண்டிருந்த மதங்கமா முனிவரைக்கண்டு, அவருக்கு தண்டஞ் சமர்ப்பித்து தனக்கு புத்திர உத்பவமாகத்தக்க உபாயஞ் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க; அம்முனிவர்: ஒருமுகூர்த்தகாலந் தியானித்துப் பிறபாடு அந்தஸ்திரீயைப்பார்த்து ஓ பக்திபுடையவளே! பூலோகத்தில் தெனதிசையில் தென்கைலாசமென்னுமொரு சிவக்ஷேத்திரமுண்டு, அதற்கு மேற்கில், நாராயணகிரியென்னும ஒரு பர்வதம பிரகாசித்துக் கொணடிருக்கின்றது நீ, அவவிடஞ்சென்று, அப்பர்வதத்திலிருக்கும் சுவாமிபுஷ்கரணி யென்னும சரசுக்கு வடபாகமாக இரண்டு நாழிகை வழிதூரத்தில், பிரவாஹிக்கின்ற ஆகாசகங்கையில் ஸ்நானஞ்செய்தால், அப்புண்ணிய விசேஷத்தானுனக்கு மிக்க பலபராக்கிரமும, புத்தி சம்பத்தும பொருந்திய புத்திரனுண்டாக்க கடவதென்ன ஆக்ஞாபிக்க, அஞ்சனாதேவியும் அம்முனிவரினது கட்டளைக்கிணங்கி, கடுகெனவே அப்பர்வதஞ்சென்று, அங்குள்ள ஆகாசகங்கையில் ஸ்நானஞ்செய்து, தனபர்த்தாவான கேசரியினுடைய ஆக்ஞையைக்கைக்கொண்டவளாக அத்தீர்த்தத்தில், ஆஹாரமில்லாமல் ஓராண்டளவும், ஸ்ரீமந்நாராயணன் பாதாரவிந்தங்களையே தியானித்துத் தவம் புரிகையில், வாயு பகவான அப்பெண்ணைக் கண்ணுற்று, அவளமீது கருணையுடையவராய, பிரதி தினமும ஒரு கனியைக் கொண்டுவந்து அவளுக்குக் கொடுத்துக்கொண்டு வந்தனர். அவளதைவாங்கி பக்ஷித்து வருகையில், ஒருநாள் வாயுவானவர் தாம் கொண்டுவரும் கனியில், தனவீரியத்தைப் புகட்டி அப்பெண்ணுக்குக்கொடுக்க, அவளதைவாங்கி அறியாமல் பக்ஷித்துவிட்டனள். அனந்தரம, அவ்வஞ்சனாதேவிக்கு கர்ப்பந்தரிக்க தவம்புரிகிற தனக்கெவ்வாறு கர்ப்பம உத்பவமாயிற்றென சிலேசித்துக் கொண்டிருக்கையில், ஓ பெண்ணே! "நீயென் வியசனப்படுகிறாய், உனக்குப பகவதனுக்கிரஹமுண்டாகி உனகோரிக்கை ஈடேறிவிட்டதென் றொரு அசரீரிவாக்காக, அவ்வஞ்சனாதேவிக்குக் கேட்க அவள் ஆனந்த பரவசமடைந்தனள்.

பிறகு அவள்கர்ப்பத்தினால் பிள்ளைபிறந்து,அதிகபாலியத்தில்தானே, உதயமாகிக்கொண்டிருக்கிற சூரியனைப்பார்த்து, அந்தச் சூரிய பிம்பம சிவப்பாக பிரகாசிககிறதினால், அதை ஒரு கனியெனறெண்ணி, அதைப பக்ஷிப்பதற்காகச் சூரியமண்டலத்தைக் கிட்டிச் செலலுகையில். இந்திரன்கண்டு தன் வஜ்ராயுதததா லச்சிசுவின கனனத்தில்மோத, அப்பாலகன்: அவ்வடிபொறுக்கமாட்டாமல் மூர்ச்சையடைந்து பாரினில் வீழ்ந்தனன. இதை வாயுவு பகவான கண்ணுற்று மிகக சினங்கொண்டு தான் சகல பிராணிகளுக்கு மாதாரமாகையால், தன் தேஹத்தை அசைய வொட்டாமல் உறுதியாய் பிடித்துகொண்டிருந்தனர். அப்போது இந்திரன் முதலான சமஸ்த தேவர்களும் வாயுவினருகிற்சென்று, அவரைப் பலவாறாக துதிசெய்து மூர்ச்சையடைந்து கிடக்கும் அப்பாலியனைத் தேற்றி அநேக வரங்களுங்கொடுதது அஞ்சனா தேவியை அழைத்து, நீ தபஞ்செய்து புத்திரனைப்பெற்ற இபபர்வத மிதுமுதலாக உனநாமதேயத்தால்பெயர்வழங்கக்கடவதென வரமளித்துவிட்டு அவரவர்கள் தங்கட ங்கள் உலகங்களுக்கெழுந்தருளி விட்டனர்கள். ஆகையால் அன்றுமுதலாக அப்பர்வதம் அஞ்சனா சல மென வழங்கப்படுகினறது.

## இதை துவாபரயுகத்தில் சேஷாத்திரி யென்பதற்குக் காரணம்.

துவாபரயுகத்தில் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணர்க ளிருவருமா ஏகாந்தமாக இருக்கவெண்ணி ஆதிசேஷனை அழைத்து, ஓய் சேஷா ! நீ துவாரத்தில் நின்று எவர்களையும் உள்ளேவரவிடாமல் பாரத்துக் கொள்ளுமென ஆக்ஞாபித்தனர். அப்போது சேஷன் பகவதாக்ஞா பரவசனாக துவாரத்தி லொருவரையும வரவொட்டாமல் தடுத்து நிற்கையில், வாயுவு பகவான் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியை சேவிக்கும்பொருட்டு வைகுண்டததிற்கு வந்து, சுவாமி வீற்றிருக்கும பள்ளியறைக்குட் பிரவேசிக்க வருகையில், ஆதிசேஷன அவரைப் போகவொட்டாமல் தடைசெய்தனன். அப்போது வாயுவுசினங்கொண்டு,ஓ துராதமாவே!முனனால் ஜயன்,விஜயன்என்பவர்களும் உனனைப்போலவே துவாரபாலகர்களாக விருந்து பகவானுக்கு அந்தரங்கபக்தர்களான சனகாகளை தடைசெய்து, அவர்கள் சாப விசேஷத்தால் பூமியில் அரக்கர்களாய் ஜனித்தனர்கள். அதுபோ லுனக்கும் அவ்விதச்சாபங்கிடைக்க பிராப்தி காலம வாய்த்ததோவென சேஷன் கோபமடைந்து, ஓ வாயுவே! நான் எப்போதும் பகவான ஸ்ரீபாதசேவையைச் செய்துக்கொண்டு அந்தரங்கத்தில் காத்துக்கொண்டிருப்பவனாதலின, இபபோது எம்பெருமான் நிததிரையி லிருப்பதால், நீ அந்தப்புரஞ் செல்லுவது தக்கதன்று எனமொழிந்தனன, அதன பொருட்டென்னை இழிவு படுத்திச்சொல்லுவதுயாது காரணமென வினவ, வாயுவு பகவான கேட்டு, ஓ சேஷா! உலகத்தில் பூனை அரசர் மாளிகைகளில் வசித்தும், யானை வெளியிற் கட்டபபட்டு வரினும, அரசர்கள் வெளியிற் புவனிவருங்காலத்தில் திருமாளிகைகளில இருக்கும் பூனையைத்தேடி

வெளியில் துரத்திவிட்டு, யானையை அலங்கரித்து எதிரிற் கொண்டுவந்து நிறுத்துவார்கள்; அதுபோல, நீ நிரந்தரம அந்தரங்கத்தில வசித்து கொண்டிருப்பவனாயினும், என்னுடன சமானமாவாயோவென தூஷணசெய்து உறத்திச்சொல்லுகையில், அவ்வார்த்தைகளை மஹாலக்ஷ்மி கேட்டு பகவானுக்கறிவிக்க, அபபொழுது எமபெருமான் தமது அந்தப்புரத்தைவிட்டு, துவாரந்தி னருகிறசென்று சேஷனைப் பார்த்து, இஃதென்ன கலஹம் விளைகின்றதனவென மொழிகையில், அப்போது சேஷன அஞ்சலிபக்தனாய், சுவாமி! வாயுவுபகவான் அந்தப்புரத்தில் பிரவேசிக்கவந்து என்னால் மறுக்கப்பட்டவனாகி, என்னை நிந்திக்கிறான. இதுதான் கலஹமெனச்சொல்லுகையில், எமபெருமான வாயுவைக் கடாட்சித்து, ஓய்! சாந்தமும், பலபராக்கிரமுமம, பொருந்தி சம்பூஜ்யனாக இருக்குமஉமக்கு மிக்கவஹங்காரமுடைய ஆதிசேஷனுடன போர்செய்ய என்ன காரணத்தால் நேரிட்டது எனக்கேட்டருள, அவ்வாக்கியததைச் சேஷன கேட்டவனாகி எமபெருமானை நோக்கி, சுவாமி! உலகத்தில் அடியேனைவிட, பராக்கிரமத்தில் மிகுந்தவர்க ளொருவருமில்லையே, அப்படிப்பட்ட அடியேனைவிட்டு, அற்ப பலமுடைய வாயுவைத்துதிக்கின்ற தென்னகாரணம்? அதை அடியேனுக்குச் சொல்லவேண்டுமென பிரார்த்திக்க, சுவாமி கண்டு: அவன் கர்வ மடக்கவெண்ணி, ஓய் சேஷா! வார்த்தைகளினால் பலாபலந் தெரியமாட்டாது, உங்களிருவருடைய பலதுறபலங்கள் தெரியவேண்டுமென்றால், நாமொரு உபாயஞ் சொல்லுகிறோம், அஃதென்னவெனில், ஜம்பூத்வீபத்தில் நிளாவிர்தவருஷததில் மேருவினபுததிரனாகிய விருஷபகிரி யென்றொரு பர்வதமுண்டு. நீ அவ்விடஞ்சென்று, அப்பர்வதத்தை உன்தேஹத்தால் கயிறுபோல் சுற்றிக்கொள்ளுவாயானால், உன்னை வாயுவு தூரத்தில் விசிறியெறிந்துவிட்டால், அவன உன்னிலும் பலமுடையனென்றும்; அப்படி வீச அசமாததனாகி விட்டால், வாயுவைப்பார்க்கிலும் நீ பலமுடையவனெனவும் தெரியவரலாமென ஆக்ஞாபிக்க, சேஷன கேட்டு, அபபர்வதம சென்று, தன்தேஹத்தினா லதைச் சுற்றிக்கொண்டிருந்தனன, அப்போது, வாயுவம அவ்விடததிற்கேகி அபபர்வதத்தைக் கண்ணுற்று தனகால் கட்டைவிரலாற்கிளப்ப, அதுஎழும்பி வாயுவேகமாக தெனதேசத்தில் பிரவாஹித்து கொண்டிருக்கிற சுவர்ன்னமுகரி யென்னும் நதிககு வடபுரத்தி லிரண்டுநாழிகை வழிதூரத்தில் வீழ்ந்தது.

அப்போது வாயுவு மறுபடியும் அப்பர்வதத்தை வீச எத்தனப்படுகையில், மேருவானது, வாயுவினிடஞ்சென்று அவரைப்பார்த்து, சுவாமி! உமக்கு ஆதிசேஷன அபராதியேயல்லது, எனது புத்திரனாகிய விருஷபாத்திரி அபராதி யல்லவே; ஆதலால் எனது புத்திரனை ஹிம்சிக்காமலிருக்கும்படி பலவிதங்களாக பிரார்த்திக்கையில் அந்த வாயுவுபகவான தயாஹிருதையனாய் அப்பர்வதத்தை அந்த இடத்தில் தானே நிறுததிவிட்டனர். பிறகு ஆதிசேஷன் கர்வபங்கமடைந்து வாயுவை நமஸ்கரித்

று, தான வாயுவினால வீசப்பட்டதினால் தேஹமெல்லாம் நடுங்கி, மறுபடி வைகுண்டத்திற்குச்செல்ல இச்சை உடையவனாகப் பகவதனுக்கிரஹம் பெற்று, அப்பாவதத்தில் தானே அந்தர்தானமாகிவிட்டனன. அன்று முதல்அப்பர்வதத்திற்கு சேஷாத்திரியென்னும்பெயர்வழங்கப்படுகின்றது.

## இதை கலியுகத்தில் வேங்கடாசலமென்னப்படுவதற்குக் காரணம்.

கலியுகத்தில் அப்பர்வதத்தின் மீது ஜகத் இரக்ஷகரான ஸ்ரீமந்நாராயணமூர்த்தி இலக்ஷ்மீசமேதராக நிவஸித்துக்கொண்டு ஸமஸ்தஜனங்களுக்கும் மோக்ஷங்கொடுத்து வருவதினால், அப்படிப்பட்ட ஜகத் இரக்ஷகரான பரமாத்மாவுக்கு வாஸஸ்தானமாகி, தம்மை தரிசித்த மாத்திரத்தில் அவரவர்களுடைய பாபங்களை தஹித்துவருவதினால் ஸம்ஸ்கிருதத்தில் வேம் என்றால்=பாபம், கடம் என்றால்=தஹித்தல், இவ்வர்த்தங்களால் பாவம் போக்கும் இடமாகிய வேங்கடாத்திரியெனப் பெயர் பெற்றிருக்கிறது.

## இதை வராஹ க்ஷேத்திர மென்னப்படுவதற்குக் காரணம்.

பூர்வகாலத்தில் திதி தேவியின புத்திரனான இரணியாக்ஷன் என்னும் அரக்கன இப்பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு பாதாளலோகத்திற்குப் போய்விடச்சே, ஸமஸ்ததேவர்களெல்லோரும, அதிகப்பயப்பிராந்தர்களாகி க்ஷீராப்தி சயனராக வீற்றிருக்கும ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை பலவாறாக ஸ்தோத்திரஞ்செய்து, அவ்வசுரனுடைய விருத்தாந்தத்தைத் தெரிவிக்க, பரந்தாமன் தயவுகூர்ந்து, ஓ, அமரர்களே! நீங்களொன்றுக்கும அஞ்சவேண்டுவதில்லை, நாம, வராகாவதாரஞ்செய்து, அவ்வசுரனைச்சம்மரித்துவிடுகிறோம் நீங்கள், சுவர்க்கத்துக்குச் செல்லுங்களென ஆஞ்ஞாபித்து, பிறகு தாம் வராகவுதாரம் பூண்டு பாதாளலோகஞ்சென்றும அவ்விடத்தில்மறைந்துகொண்டிருக்கிற,ஹிரணியாக்ஷனைச்சம்ஹரித்தும,எமபுரத்துக்கனுப்பிவிட்டும இப்பூமியைக்கொண்டுவந்து எப்போதும்போல நிலைநிறுத்தியதனால்.சமஸ்ததேவர்களும பகவானைஸ்தோத்திரஞ் செய்து,இப்பூலோகத்தில்தாமே சுவாமிகள நிவாஸமாகிஇருந்துக்கொண்டு ஸமஸ்தமானவர்களுக்கும ஸேவைகொடுத்து இரக்ஷித்தருளவேண்டுமென்றும் பிரார்த்தித்ததினால், எம்பெருமான் திருவுளமகிழ்ந்து, கருடனை யழைத்து, இப்போது வைகுண்டஞ் சென்று, அவ்விடத்திலிருக்கும் நமது ஆனந்தவிமானத்தை கொண்டுவ நம்படியாகக், கட்டளையிட அவரும சுவாமியின ஆஞ்ஞையை சிரமேற்கொண்டு வைகுண்டஞ்சென்று ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் வீற்றிருந்த விமானத்தைக்கொணர்ந்து, இவ்விடத்தில் பிரவாஹித்துக்கொண்டிருக்கும ஸ்வர்ணமுகரீ நதிக்கு வடக்கரையிலிருக்கும், சேஷாத்திரியின பேரில் நிறுத்த, அப்பரந்தாமன ஆநந்தமடைந்து, சாந்தரூபராய் கருட, விஷ்வக்ஸேன சேஷாதி சகலபக்தர்களுடனும, ஸ்ரீதேவி பூதேவிகளுடனும, விமானமத்தியில் எழுந்தருளி ஸமஸ்ததேவர்களினாலும் பூஜிக்கப்பட்டவராய்க் கொண்டு, அவ

ரவர்கள் அபீஷ்டங்களின்படி ஸ்வர்கலோகத்திற் கனுப்பிவிட்டு, தாம பக்தபராதீனராகையினாலே கலியுகத்தில் ஸமஸ்த மானவ ஜாதியாக ளுக்கும தம்மைச்சேவித்து வருவதனால், மோக்ஷங்கொடுத்துக்கொண்டு அப்பர்வதத்தில் வீற்றிருப்பவராதலால், அதை வ ரா ஹ க்ஷே த் தி ர மெனனப்படுகிறது.

## அவ்விடத்தில் சுவாமி வீற்றிருப்பதற்குக் காரணம்.

பூர்வம நைமிசாரண்ணியத்தில் சௌனகாதிமஹாமுனிகள் யாகஞ்செய்து கொண்டிருக்கையில. அவடத்திறகு பிரம்மாவின் புத்திரரான நாரதர் எழுந்தருளி, அவர்களைக்கண்டு, ஓ, சௌனகாதிமுனிகளே! உலகத்தில் பிரம்ம, விஷ்ணு மஹேசுவரர், ஆகிய மூவர்கள சிருஷ்டி ஸதிதி லயை காரியங்களுக்கு கர்த்தர்கள்; அவர்களில் யாரைக்குறித்து நீங்கள் யாகஞ் செய்கிறீர்களென்ன வினவ, அம்முனிவர்கள் கேட்டு, ஓ, நாரதரே! இம்மூவர்களில் சத்துவகுண ப்ரதான முடையவனெவனோ, அந்த பரந்தாமனைக் குறித்து யாகஞ்செய்கின்றோமென, அம்முனிவர்: அந்தப் பகவான் எவரெனவினவ? அப்போது அம்முனிவர்களுக்குத் தெரியாமல் பிருகு மஹாரிஷியை அழைத்து, ஓ ருஷீசுவரரே! நீர் பிரம்மலோகம் கைலாசம, வைகுண்டம், இம்மூன்று திவ்ய ஸ்தலங்களுக்குச் சென்று, அமமூர்த்திகளையுங் கண்டு அவர்களில் சத்துவகுண பிரதான முடையவனெவனோ, அவனை எங்களுக்கறிவியுமென வேண்டிகொள்ள அந்த ரிஷிகள் கேட்டு, முதலில் கைலாசத்துக்குச் சென்றனர். அவ்விடத்தில் சிவபெருமான, பார்வதிதேவியாருடன் கிரீடித்துக்கொண்டிருந்தபடியால் அந்தச்சமயத்தில், பிருகுமுனி வந்தாரெனக் கோபத்துடன் கண்களைவெருட்டிப்பார்க்கையில் அத்துடன் அம்முனிவர் இவர் தமோகுண பிரதானரெனவறிந்து, அக்கைலாசத்தைவிட்டு சத்தியலோகத்திற் செல்ல, அப்போதவிடததில் பிரும்மதேவன் சரஸ்வதியுடன கிரீடிததுக்கொண்டிருந்தனர்; அச்சமயத்தில் பிருகுமஹாமுனி, அப்பள்ளியறையிற்சென்று அவருக்குச் சாஷ்டாங்க தண்டஞ் சமற்பித்து நிற்கையில், அவரைப்பார்த்து பிரும்மாவானவர் வசனியாமல் மௌனஞ் சாதித்தருளினர்; அப்பொழுது, அம்முனிவர் இவர் ரஜோகுண பிரதானரெனவறிந்து, அந்தலோகத்தைவிட்டு வைகுண்டத்துக்குச்செல்லுகையில், ஸ்ரீமந்நாராயணமூர்த்தி இலக்ஷ்மீசமேதராய் சயனித்திருக்க: அவரைப் பார்த்து அம்முனிவர் தன் பாதத்தினால் சுவாமியின் மார்பினி லுதைத்தனர்; அப்பொழுது, பகவான் சினமுறாமல் அம்முனிவரை அழைதது, குசலம் விசாரித்து, சந்தோஷகரமாய் அவரைப்பூஜித்தருளினர்; அப்பொழுது, அம்முனிவர் இவர் தான் சத்துவகுணப்பிரதானரென வறிந்துகொண்டு, மறுபடியும் நைமிசாரண்ணியத்திற்கு வந்து, சௌனகாதி முனிசிரேஷ்டர்களுடன் வைகுண்டவாசரான பரநதாமன் சத்துவரூப குணமுடையவரெனச் சொல்லினார்.

பிறகு இலக்ஷ்மி: பரந்தாமனுடன், சுவாமீ! தாமசகலஜகத் இரக்ஷ கராக விருந்தும, பிருகுமுனிவரா லுதையுண்டதினுல் இனியான இவ்வுல கம்விட்டு பூலோகத்திற்குச்செல்லுகிறேன, எனவிளம்ப, அப்பெருமான அனுமதிபெற்று, பூலோகத்திறகுச்சென்று, கோதாவரி நதிதீரத்தில் பிர காசிக்கின்ற கொல்லாபுரத்தில் வீற்றிருந்தனர். அனந்தரம், இருபத் தெட்டாவது துவாபரயுகததில்ஸ்ரீலக்ஷ்மிநாராயணன் இலக்ஷ்மியினது மோஹாந்தகாரத்தைப் பொறுக்கமாட்டாமல், வைகுண்டத்தைவிட்டு பூ லோகத்திற் கெழுந்தருளி அவ்விடத்தில் ஸ்ரீலக்ஷ்மியைத் தேடிக்கொ ண்டு கங்காநதிக்குதெற்கில் இருநூறு யோசனைதூரத்தில் பிரவாஹிக கின்ற சுவர்னமுகரி யென்னும் நதிக்கு வடபுரத்தில், இரண்டுநா ழிகைவழிதூரத்தில், முன்னுல் வைகுண்டததில் ஆதிசேஷனும் வாயுவும் போற்செய்து, ஆதிசேஷனுல பூலோகத்துக்குக் கொண்டுவந்த சேஷாச லத்தை கடாட்சித்து, இஃது நாம நிவசிக்க வைகுண்டத்தைவிட ஆநந் தகரமா இருககிறதெனறெண்ணி, அவ்விடத்தில் தானே துவாபரயுகாந்த ம் வரையில், ஓர் புற்றினிலொருவருக்குந் தெரியாமல் வீற்றிருந்தனர்; பிறகு, கலியுக ஆரம்பத்தில் சோழ இராஜன் புத்திரனுன தொண்ட மான் சக்கிரவர்த்தியென்னும்அரசன் நியாயமார்க்கந் தவருமல் இராஜ யபரிபாலனஞ் செய்துக்கொண் டிருந்தனன், அப்போது ஸ்ரீமஹாலக்ஷ் மி எவர்களுக்குந் தெரியாமல் புற்றினில் விற்றிருக்கும் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியை சகல பிரஜைகளுக்குந் தெரிவிக்கவெண்ணி, பரமனை ஓர் பசு வாகவும், ஈசுவரனைக் கன்ருகவுஞ் செய்து, தாம் கோபிகையாக வேஷம் பூண்டு அந்தப் பசுவை ஓட்டிக்கொண்டு வந்து இராஜ்யபரிபாலிகனுன் தொண்டமான் சக்கிரவாத்திக்கு விக்கிரயித்து தாம் அந்தர்தானமாய் விட்டான்.

பிறகு பசுவானது மேய்ச்சலின்பொருட்டு நித்தியமும் சேஷா த்திரிக்குப் போய், அவ்விடத்தில் பரந்தாமன் மறைந்து நிற்கும் புற்றி னில், தனது பாலை அபிஷேகஞ்செய்து வீட்டிற்கு வந்துகொண்டிருக்கும; இப்படி இருக்கையி லொருநாள், அவ்வரசன பத்னி; பசுவை மேய்ப்போ னை அழைப்பித்து, தாம் கொண்ட பசு நித்தியமும் பாலில்லாமல் வரண் டுஇருக்க காரணம் யாது ? அப்பாலை எவர்கள் குடித்துவருகிருர்களென, தடிகொண் டடிக்க; அவ்விடையன் துக்கித்து, மறுநாளுதயத்தில் அப்பசு வின கழுத்திலொருகயிறுகட்டி அப்பசுவை கெட்டியாகக் கையினிற்பற்றி கொண்டு அப்பர்வததிற்குச் சென்றனன் ; அப்போது, பசுவானது நித் தியமும் தான் அபிஷேகஞ் செய்கிற விதமாக அப்புற்றினில் தன்பாலைக் கறந்தது ; அதைக்கண்ட அவ்விடையன் : மிகக்கோபமடைந்து, தன்கை யிலிருக்குங் கோடாரியால் அப்பசுவை அடிக்கப்போகையில் அந்தப் பக வான் : பாகவதர்கள் பக்தியுடன துளஸீதளங்கொண்டு பூஜிக்கப் படுவதி னுலேயே அவர்களின் விபத்தை நிவாரணசெய்யுஞ் சுபாவகுணமுடை யவராதலின். நிததியமும் தமக்குப் பக்தியுடனே க்ஷீராபிஷேகஞ் செய்து வருகிற அப்பசுவை இரக்ஷிக்க வெண்ணி, அவ்விடையனுடைய கைக்

கோடாலியின் அடியைத தாமேந்திகொண்டு, அப்பசுவை இரக்ஷித்தருள பரந்தாமனது சிரசினிலிருந்து இரக்தப்பிரவாஹம் வெளிபட அதுகண்டு அவ்விடையன் பரலோகபிராப்தி யடைந்தனன்.

பிறகு அப்பசுவானது பர்வதமிரங்கி அரசனிடஞ்சென்று தரையில் வீழ்ந்து புரளுகையில், அவ்வரசன்கண்டு இஃதென்ன? அதிசயமென றெண்ணி அப்பசுவினிடமாக ஒரு தூதனையனுப்ப, மறுபடியும் பசுவானது அத்தூதனுடன் மலைக்குச்சென்று அவ்விடத்தில் மாண்டுகிடைக்கும கோபாலனிடம் நின்றது; அப்போது தூதன், அக்கோபாலனையும் புற்றினிடமாக உத்பத்தியாயிருக்கும் இரக்தபிரவாஹத்தையுங் கண்டு, ஆச்சரியமடைந்து சீக்கிரமாக அரசனிடத்திற்கேகி, அவருடன் இவ்விருத்தாந்தங்களைத்தெரிவிக்க, அரசனும சீக்கிரமாக வெழுநதிருந்து அவிடஞ்சென்று, அந்த இரத்தவெள்ளத்தைக்கண்டு மிக்கபயமடைந்திருக்கையில், பரந்தாமன்: புற்றைவிட்டு அவ்வரசனுக்குச் சேவைதந்து, ஓ துராத்மாவே! நீ, பிரபுத்துவஞ்செய்து வருகையில் எனனை அநியாயமாய் இடயனைக்கொண்டு அடிபித்தாயாகையால், நீ எப்போதும் சிந்தாகிராந்தனுக இருககக்கடவாய் என, சாபமளித்தனர்; அப்போது, அரசன் பலவாறுக ஸ்வாமியை துதித்து, ஸ்வாமீ! நிரபராதியாகிய அடியேனுக்கு, தாம் முன்னுமபினனும் விசாரியாமல் இப்படிக்குச் சாபமளிக்கலாமாவென வேண்டிக்கொள்ள, அக்கடவுள: மனமிரங்கி நாம் உனது மனதையறியாமல் சாபமளித்துவிட்டனம், ஆயினும் உனக்கு, ஆகாசராஜனென பிரசித்தமுடைய ஒரு புத்திரனுண்டாகி, அவனுக்கு பத்மாவதி என்னுமொருபெண்பிறந்து, அக்கன்னிகையை நமக்குத்தநது விவாகஞ்செய்யப் போகின்றனன்; ஆகையால் அக்காலததில் உனது வியசனந்தீருமென வனுக்கிரஹித்தும் அச்சாபவிமோசன மாகுங்காலநிர்ணயமுங்குறித்துவிட்டுந் தமது சிரசினிலுண்டான காயததுக்கு ஔஷதஞ்செய்ய அவ்விடத்திற்கு பிரஹஸ்பதியை வரவழைத்தும், அவர் வாக்கின்படி அற்றிபாலைக்கொண்டு எறுங்கமபஞ்சை நனைத்து தமது காயத்தின்மீதுவெய்தும், அனந்தரம் அவ்விடத்தில் ஸ்வாமிபுஷ்கரணி தீரத்திலிருக்கும் புளியமரத்தினடியிற் புற்றினில் பிரவேசித்து சிலகாலஞ்சென்றபின் வராஹமூர்த்தியின் அனுமதியால் இப்போதுங்கூட தமது பக்தர்களுக்கு ஸர்வாபீஷ்டமுமகொடுத்துக்கொண்டு, அவரவர்கள் கொண்டுவரும் தனங்களை எல்லாமாகர்ஷித்துக் கொண்டவராக தம்மைசேவிப்பவரினது பாவங்களை ஹரித்துக்கொண்டு வேங்கடாஜலபதியென்னும நாமதேயத்தால் பிரஸித்தியடைந்திருக்கின்றனர்.

## பத்மாவதி விவாஹம்.

இப்படிச் சிலகாலஞ்சென்றபிறகு சோழராஜனுக்கு ஆகாசராஜனென் றொருபிள்ளை பிறந்து, அவன் தரணீதேவி யென்னுமொரு பெண்ணை மணம்புரிந்து, அப்பத்தினியுடன் பலநாள் சையோகஞ்செய்

துவந்தும் ஸந்தானமில்லாமல் மிக்கவியசனமடைந்து, தமது குருவாக் கின்படி யாகஞ்செய்ய எத்தனித்து, அந்த யாகசாலையை உழுகையில், அக்கலப்படை உழவுசாலிலிருந்து ஒரு சுவர்ணன புஷ்பமும், அதனிட மாக ஒரு பெண் குழந்தையும் காணப்பட்டது; அப்போது, அரசன்க ண்டு அக்குழந்தையை தன் பத்தினியிடங்கொடுத்துப் போஷித்துவரும் படி கட்டளையிட்டு, யாகஞ்செய்கையில், அவ்வரசன் பத்தினி கற்பந்தரி த்து ஒரு புத்திரனைபெற்றனள். அப்போது அரசன் அப்புதல்வனுக்கு வசுதாசனெனவும், சுவர்ன புஷ்பத்திலுதித்த சிசுவுக்கு பத்மா வதியெனவும் பெயர்கள் வைத்து போஷித்து வருகையில் பத்மாவதி பருவமுடையவளாய், ஒருநாள் தன் தோழிமார்களுடன் புஷபவனத்தில் பூமலர்க்கொய்துக்கொண்டிருந்தனள். அந்த சமயத்தில் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியானவர் வேட்டையாடவெண்ணி நிற்கையில், எதிரிலொரு அசு வங் காணப்பட்டது. அதன்பேரிலேறிக்கொண்டு அவ்வாரண்ணியததில வேட்டையாடி, அந்தப்பர்வதமிரங்கி கொஞ்சதூரஞ் செல்லுகையில், அ வ்விடத்திலொருயானை: அப்பரந்தாமனைக்கண்டு, ஸ்வாமீ! அடியேனைப் பாதுகாக்க வேண்டுகையில், அவ்விடத்தில் தோழிகளுடன் பூமலர்க் கொய்துக்கொண்டிருக்கும் பத்மாவதி, எம்பெருமானுக்குக் காணப் பட்டனள். உடனே, எம்பெருமான்: சரணடைந்தயானையைக் காற்றருளி, குதிரையினின்றிறங்கி பத்மாவதியினிடஞ் செல்லுகையில், அவளும், அவள் தோழிமார்களுங்கண்டு, இவர்யார்! இங்கு ஏன் வந்தனரென பல வாறுக சம்சயித்து பத்மாவதியும், தன் தோழிகளுடன் அந்த எம்பெருமானுடைய வரலாற்றைக்கண்டு தெரிந்துகொள்ளும்படி கட்ட ளையிட தோழிகள் அவரிடஞ்சென்று, அவருக்குத் தண்டன் சமர்ப்பித்து ஸ்வாமீ! தாம யாருடைய குமாரர்? தமது பெயரென்ன? இங்கு எழுந்த ருளின காரணம்யாது? இவ்விவரங்களை அடியாருக்குத் தெரியச்சொல்ல வேண்டுமென வினவ, எம்பெருமான் அதிக சந்தோஷமடைந்து, அத் தோழிமார்களுடன் தனது குலம் சந்திரவம்ச பரம்பரையென்றும், க்ஷத் திரியகுலமெனறும், வசுதேவன் தனக்குத்தகப்பன் என்றும், தேவ கிதேவி தாய் எனறும், தனதுபெயர் கிருஷ்ணனென்றும், தமயன் பெயர் பலபத்திரனெனறும், தன் வாசஸ்தலம் வெங்கடாத்திரி யென்றும், விருத்தாந்தத்துடனறிவித்தும், இவ்விடமிருக்கும் அரசன் மக ளினது குலோத்திரங்களை தமக்கறிவிக்கும்படி கேழ்க்க; பத்மாவதி கேட்டு. அதிக சினங்கொண்டு எனது தகப்பன்பெயர் ஆகாசராஜர், யான் அவரினதுமகள், என் பெயர் பத்மாவதியென்பார்கள் என வதட்டிச் சொல்லுகையில், பரந்தாமன் கேட்டு, ஓ பேண்ணே! உலகத்தில் அன்னத்தை அபேக்ஷித்தமானிடருக்கு அன்னங்கொடுத்தவரோ உத்தமரெ ன சொல்லிக்கொண்டு இப்போது யாம் உன்பேரில் விருப்பங்கொண்டு இவ்விடம் வந்தோம; நம்மிடத்தில் தயையுள்ளவளாய் நம்மை ஆலிங் கனஞ் செய்துக்கொள்ளென மொழிய அப்பெண்கேட்டு ஓ! உலகத்தில் சொல்லாவசனங்களைச் சொல்லுகிறீர்! எனது தகப்பனாராகிய ஆகாச

ராஜன்கேட்டால, உமதுபிராணனை போக்கடிப்பாரொன, பரந்தாமன்: அவ்வாக்கியங்களை செவிகொள்ளாமல், குதிரைவிட்டிறங்கி பத்மாவதினருகில் எழுந்தருள, அவள்: தன் தோழிமாரகளுடன பரந்தாமனை கற்களாலடிக்க, எம்பெருமான: அவ்வடி பொறுக்கமாட்டாமல், திரும்பி வேங்கடாத்திரிக்கு எழுநதருளி, சிந்தாகிராந்தராக துயரமடைந்திருக்கையில், எம்பெருமானுக்கு அந்தரங்கபக்தியுள்ள வகுளமாளிகையென்பவள்: ஸ்வாமியால் ஆரணியத்தில் நடந்தவரலாற்றை செவியுற்றவளாய்க்கொண்டு ஆகாசராஜனது நகரஞ்சென்று, அவன் பததினியாகிய தரணிதேவியுடன், ஸ்ரீமந்நாராயணமூர்ததி வேங்கடாஜலத்தில் வீற்றிருந்துக்கொண்டு, உனது மகள் பத்மாவதியைக்கண்டு மோஹமடைந்து, அந்தப்பெண்ணை மணம்புரிய வேண்டிய பிரயத்தினங்கள் நடப்பிவிக்கும் பொருட்டு, என்னை உம்மிடமனுப்பினுரொன மொழிந்து, அவளைச்சம்மதிப்படுததி, அவவரசன் புத்திரனை வசுதாசனை ஸவாமியிடமழைத்துக்கொண்டுவந்து, திருக்கல்வியாணமூகூர்த்தம நிச்சயித்து, அந்த மஹோத்ஸவததிற்காக வீற்றிருக்குமபடி பிரும்மருத்திராதிகளுக்கு சமாசாரமனுப்பியதில், பிரும்மன் மிககஆனந்தமடைந்து இந்திரன்முதலான சகலதேவர்களுடன் தன் பத்தினியாகிய ஸரஸ்வதியுடனும் ஸத்தியலோகம்விட்டு ஹம்சவாஹனரூடராய் அப்பர்வதத்திற் கெழுந்தருளினுர்கள்; அப்போது, ஈஸ்வரரும் பார்வதி சமேதராக குமாரவர்க்கங்களுடன் அவ்விடத்திற்கெழுந்தருள, ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் தமதுதிருமணத்திற்காக நெடுநாளாகத் தம்மைப பிரிந்திருககிற ஸ்ரீமஹாலக்ஷ்மியை அவ்விடமவ்ரவழைக்க நினைத்து தமதுமனோபீஷடத்தை பிரும்மாவுக்கறிவிக்கையில், அவர் குமாரசுவாமியையவரவழைத்து, ஓய்! உலகமாதாவாகிய இலக்ஷ்மி கொல்லாபுரததில் வீற்றிருக்கிருளாகையால், நீரவிடத்திற்கேகி இங்கு எழுந்தருள பண்ணிகொண்டு வரவேண்டியதெனக் கட்டளையிடுகையில், அக்குமாரஸ்வாமி கேட்டு: அவ்விடத்திலிருக்கும் இலக்ஷ்மியை அடியேனஎவ்விதம்எழுந்தருள பண்ணிக்கொண்டுவருவேனெனசுவாமியுடன்மொழிகையில், அப்பரமன் அவருக்குச்சில உபாயங்கள் சொல்ல: அதைக்கேட்டு அக்குமாரஸ்வாமி கொலலாபுரஞ்சென்று, அங்கிருக்கும் இலக்ஷ்மிதேவியை நமஸ்கரித்து தேவியாருடன பத்மாவதி திருக்கல்வியாண மஹோத்ஸவத்தைச் சொல்லாமலே, அதிசீக்கிரத்தில் அவளை அப்பர்வதத்திற்கெழுந்தருள பண்ணிகொண்டுவந்தனர். அப்போது வெங்கடாசலபதி பஹுகாலமாய்த் தம்மைபபிரிந்திருந்த இலக்ஷ்மியை கடாக்ஷித்து ஆனந்தபரவசமடைந்து பிரும்மருத்திராதிகள் முதலான ஸமஸத தேவர்களுடனே அவவிடத்தில் பிராமமணாகளுக்கு பக்ஷிய போஜ்ய சோஷ்ய லேஹியங்களுடன் அமுதளிப்பிக்கச்செய்து அப்பர்வதம்விட்டு ஆகாசராஜன் நகரததுக்கெழுந்தருளி, பத்மாவதியை மணம்புரிந்து, மறுபடியும் அப்பர்வதம் வந்து அவ்விடத்தில் ஸவாமி புஷ்கரணீ தீர்த ததில் நிவஸித்துக்கொணடிருக்கின றனர்.

## குமாரதீர்த்தமஹிமை.

பூர்வத்தில் வடதேசஸ்தனான ஒருபிராமமணன் வார்திபத்தை அடைந்து அப்பருவத்தில் தரித்திரத்தினால் அதிக சங்கடங்களுடன் தன் குடும்பத்தை பாதுகாக்கும் திரமையன்றி உலகததில் இஹபரங்களிலும் சுகரமானவை தன மாகையினாலே, அத்தனதைச்சம்பாதித்து இஹபர லோகங்களிலும் சுகத்தை அடைவதற்கு தனக்கு வார்திபம் சம்பவித்த தென அதிகதுயரமடைந்து அவன சுதேசம்விட்டுவந்து தெனதிஸையில் பிரவாஹித்துகொண்டிருக்கிற சுவர்ணமுகீ நதிதீரத்திலிருக்கும் சேஷா சலத்திற்குச் சென்று, அப்பர்வதமுச்சியில் அச்சருவில்வீழ்ந்து பிராணத் தியாகஞ்செய்து கொள்ளவெண்ணி, பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் முத லானவர்களை தியானித்து, வேங்கடாசலபதிக்கு நமஸ்கரித்து, யான் இச் சருவில் வீழ்ந்திறக்கிறேன என, முறையிடுகையில் அப்பரந்தாமன் பக்த ரக்ஷகனுகையால் தயாளஹிருதயமுடையவராய் ஓர் அரசனது புத்திரனை ப்போல வேஷம்பூண்டு, அந்த பிராமமணனுக்குப் பிரஸன்னமாகி, ஓய் பிராம்மணா ! நீஏன இப்படிப்பட்ட யோசனைகள் செய்தாய் ? உலகத்தில் பிராம்மணன இப்படிப்பட்ட சாஹசங்கள் செய்தானேயானால்,அவனுக் கு பரலோகத்தில் அதிக துயரமுண்டாகுமாகையால், உன் தரித்திரத்தை நிவர்த்திக்க யான உபாயஞ்சொல்லுகின்றேன; நீ இறங்கிவாவென் றழை க்க, அந்த பிராமமணன: சந்துஷ்டி யடைந்து அப்பர்வதத்தின் உச்சியி லிருந்திறங்கி அந்த மஹானுபாவனிடம் வந்து நின்றனன்; அப்போது இராஜவேஷம்பூண்ட ஸ்ரீமந்நாராயணன் : ஓய் பிராமணோத்தமா! நீ என் னுடன்கூட எனது கரத்தைபபற்றிக்கொண்டு வருவாயானாலுனக்கு சகல சம்பத்துகளு முண்டாகுமெனறு சொல்ல, அந்தப்பிராம்மணன் அவரின து கரம்பற்றிக்கொண்டுஅப்பர்வதந்திலிருக்கும் பாபவினாசதீர்த்தத்துக்கு வடபுரத்தில் நினறனர் ; அப்போது அவ்வரசன்குமாரன் ; அந்த பிராம மணனுடன, ஓய் நீ! இந்த பாபவினாசத்திற்கு வடபுரமிருக்கின்ற தீர்த்தத் தில் ஸ்நானஞ் செய்வாயானால், உனக்கு வாரதிபம் நீங்கி கௌமாரத்துவ மும், சகலசமபத்துகளும் உண்டாகுமென மொழிந்தனர்; அப்போது அவர் அரசன் குமாரனது வார்த்தைகளுக் கிசைந்து, அந்த தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்கையில் அந்தப்பகவான அந்தரத்தானமாய் விட்டனர்.

பிறகு அந்தபிராம்மணன தேஹம விருத்தாப்பியமநீங்கி கௌமார த்துவமடைய, அப்போது அவன மிககவதிசயமடைந்து தனனுடன்வந்த அரசன் ஸ்வாமி என வறிந்துகொண்டு அப்பரந்தாமன தனக்குக் காணும ற்போனானென சிந்தித்து, நாறறிசையிலுஞ் சுற்றிப்பார்க்கையில், அவ்வெ ம்பெருமான் : ஆகாயத்தினிடமாக இருந்துகொண்டு, ஓ பிராம்மணா! உன க்கு விருத்தாப்பியம் நீஙகி கௌமாரத்துவ முண்டானபடியால, இனி நீ உன்தேசத்துக்குச்சென்று சகலசம்பத்துகளுமடைந்து, நிஷிததகாரியங்க ளைவிட்டு சாஸ்திரசம்மதமான கருமங்களைச்செய்துகொண்டு தாரா புத்

திராதிகளை இரக்ஷித்து, முடிவில் பரமபதத்திற்கு வரக்கடவாயாக எனக் கட்டளை இட அந்தப்பிராம்மணன ஆநந்தக்கடலில் மூழ்கினவனாகித் தன வீட்டிற்குச் சென்றனன். இவ்விதமாக அந்தப் பிராமமணன் ஸ்நானஞ் செய்த மாத்திரத்தில் விருத்தாப்பியம் நீங்கி, கௌமாரத்துவம் சம்பவித்தபடியால் அதுமுதல் அந்ததீர்த்தம் இராஜகுமார தாராதீர்த்தமென பிரசித்தியடைந் திருக்கின்றது.

## தும்புருதீர்த்த உத்பத்தி.

பூர்வம் தும்புருவ னென்றொரு கந்தருவன், மாசிமாதத்தில் நித்தியமும் சேஷாசலத்துக்குச் சென்று அவ்விடமிருக்கும் கோணதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அத்தீரத்தில் திருமூர்த்தி ஸ்வரூபமாக பிரகாசித்து கொண்டிருக்கிறஅரசமரத்துக் குபிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்துவிட்டு, வீட்டிற்கு வநதுகொண்டிருந்தனன். அவன் பத்தினி சூரியோதயம் வரையில் குளிரினால் துயிலெழாம லிருந்ததைக்கண்டு, ஓ துன்மார்க்கமுடையாளே! எல்லாமாதங்களிலும் மிக்க புண்ணியமுண்டாக்கும் இந்தமாசிமாதத்தில் இவ்விதமாக சூரியோதயம்வரையில் யாராவது தூங்கிகொண்டிருப்பார்களா? நித்தியமும் என்னுடன வேங்கடாசலத்துக்குவந்து கோணதீர்த்தத்தில் ஸநானஞ்செய்து அரசமரத்திற்கு பூஜாபிரதக்ஷிண நமஸகாரங்கள் செய்து வாவென, அப்பெண்கேட்டு ஓய பிராணநாதனே! உம்மைப்போலொத்த கடினசித்தமுடையவரை நான் எங்குங்கண்டதில்லை, பாலபருவமடைந்து கற்பவதியாகிய எனனை இப்படிப்பட்ட குளிர்காலத்தில், குளிர்ச்சியுள்ள நீரில் முழுகச்சொல்லுகிறீரென தன்புருஷனை நிந்தித்துச் சொல்லுகையில், அதைக்கேட்ட அத்தும்புருவன்: அதிக கோபமடைந்து, உனக்கு இஹபாசாதகமான தருமங்களை யான் உபதேசித்ததற்கு, என்னை நிந்தித்தாயாகையால், நீ சேஷாசலத்தில் கோணதீர்த்ததிலிருக்கும் அரசமரததின பொந்தில் வறட்டுத்தவளையாக இருக்கக் கடவையென சாபமளித்தனன; அப்போது, அப்பெண் கேட்டு, அதிக பயமடைந்து, தன் புருஷனுக்கு தண்டம் சமாப்பித்து, அச்சாப விமோசனகாலஞ் சொல்லவேண்டுமென வருந்திக்கேட்க, கந்தருவன் கேட்டு: பலநூற்றாண்டுகளுக்குப் பிறகு அகஸதியமாமுனிவர் அப்பர்வததிற்கெழுந்தருளி கோணதீர்த்ததில் ஸநானஞ்செய்ததமதுசிஷயவர்க்கங்களுக்கு அந்தந்தீர்த்தமஹிமையைசொல்லப்போகின்றனா; அக்காலத்தில், நீ அவ்வரசமரத்தின்பொந்தில் வசித்துக்கொண்டு, அந்தப்புண்ணியகதையைக்கேட்பாயானால், மண்டூகதேஹம்விட்டு உனநிஜரூப மடைந்து எமமிடம்வருவாய்என்றுசொல்ல: அவள் தன்பதிசாபத்தினால் வறட்டுத்தவளையாகி, சேஷாஜலத்தில் கொணதீர்த்தத்தி லிருக்கிற அரசமரததில் நெடுநாள் வாசஞ்செய்துக் கொண்டிருக்கையில், அகஸ்தியமாமுனிவர் அநேக சிஷர்களுடன் அந்தத் தீர்த்தத்துக்கெழுந்தருளி, அதில் ஸ்நானஞ்செய்தபின், அத்தீரத்திலிருக்கும் அரசமரத்திற்கு பூஜாபிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்தும், அவ்விடத்தில் வீற்றிருந்துந் தன் சிஷர்களுக்கு அந்த

தீர்த்தமஹிமையை விவரித்துச்சொல்லுகையில், அத்தவளை அக்கதையைக் கேட்டமஹிமையால, மண்டூக தேஹம்விட்டு அதிக சௌந்தரியமுடைய பெண்ணாக அம்முனிவருக்கெதிரில் வந்து நிற்கையில், அவர்கண்டு அதிசயித்து அப்பெண்ணை நீ யாரென கேழ்க்க! அவள்: அம்முனிவருடன் தனது விருத்தாந்தத்தைச் சொல்லினள்; அத்தும்புருவன், நித்தியமாய் வருகிறது போல அவ்விடதநிற்கு ஸ்நானஞ்செய்துவருகையில், அகஸ்தியமுனிவர் அந்த தும்புருவனைப்பார்தது ஓய்! உமது பத்தினி இந்த தீர்த்தமஹாத்துவத்தைச் செவியுற்றதால் சாபவிமோசனமடைந்தனள், இனி நீ இப்பெண்ணை பரிகிரஹித்து, இவளுடன் இததீர்த்தத்தில் ஸநானஞ்செய்து இவ்விடமிருக்கும் ஸ்ரீ நி வா ச மூ ர் த் தி யை நமஸகரித்துவிட்டு தேவலோகத்திற்குச் செல்லென, அததும்புருவன் கேட்டு: தன் பத்தினியுடன் அத்தீர்த்தததில்ஸ்நானஞ்செய்து, அரசமரபிரதக்ஷணஞ்செய்து, ஸ்ரீநிவாசமூர்த்திக்குநமஸகரிக்கையில்அவனுக்கு ஸவாமி பிரசன்னமாகி உனக்கென்னவேண்டுவதெனகேட்டருள; அக்கந்தருவன், நிரந்தரம் தனக்கு ஸ்ரீநிவாசன் சேவை கொடுத்துக்கொண்டிருக்கவேண்டுமெனவும், தான் ஸ்நானஞ்செய்துக்கொண்டிருந்த தீர்த்தம் இதுமுதல் தன்னுமதேயத்தால் பெயர் வழங்கப்படவேண்டுமெனவும், பிரார்த்திக்க பரந்தாமன்: அவ்வண்ணமே வரமளித்தனராகையால், பூர்வத்தில் கோ ணதீர்த்தமென பெயர்வழங்கிய தீ ர் த் த ரா ஜ ன் அன்றுமுதலாக து ம் பு ரு தீ ர் த் த மெ ன பிரசித்தியடைந்திருக்கிறது.

## நாரததீர்த்த உத்பத்தி.

ஒரு காலத்தில் பிரம்மாவின் புத்திரனான நாரதமாமுனிவர், பகவதாராதனை செய்யவெண்ணி வேஙகடாஜலத்துக்குவந்து, அவ்விடத்தில் அனாதியாய் பிரகாசித்துக் கொண்டிருக்கிற ஒரு தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்கையில், அந்த வேங்கடன் ஆனந்தமடைந்து புன்சிரிப்போடு அம்முனிவருடன் உனக்கென்னவரம் வேண்டுமெனவினவ? அம்முனிவர் கேட்டு: தான் நிஸபுருஹிதனாதலால், தனக்கு ஸ்வாமி பாதாரவிந்தத்தில் திரடபக்தியுண்டாயிருக்கவேண்டுமெனவும் தான் நீராடிய அந்த தீர்த்தத்துக்கு, தன் நாமத்தினால் பெயர் வழங்கப்படவேண்டுமெனவும் வேண்டுகையில், அப்பரந்தாமன்: அவ்வண்ணமே வரந்தந்தனர், அதுமுதலாக அது நா ர த தீ ர் த் த மென பெயர் வழங்கப்படுகிறது.

## ஆகாசகங்கை உத்பத்தி.

பூர்வம் ஒரு பிராம்மணோத்தமன் தான் பகவத்கடாக்ஷத்தினால் விஷ்ணு பாதாரவிந்தமடைய வேணுமென்றெண்ணி வேங்கடகிரிகுவந்து, அவ்விடத்தில் ஸ்ரீமந்நாராயணன் ஆக்ஞையால் ஜநோபகாரத்தின் பொருட்டு வீற்றிருக்கும் ஆ கா ச க ங் கை யி ல் நீராடி ஸ்ரீமந்நாராயணதியானபரனாக இருக்

கையில், அவனுக்கு ஸ்ரீவேங்கடேசன் பிரஸன்னமாகி, உனக்கென்ன வரம் வேண்டு மியம்புமென, பிராம்மணன், தனக்கு விஷ்ணு ஸாலோக்கிய பதவி வேண்டுமென விண்ணப்பஞ்செய்ய அதை பரந்தாமன் கேட்டு, ஓய் நீ, இன்னுங்கொஞ்சநாளைக்கு இந்த ஆ கா ச க ங் கை யி ல் ஸ்நானஞ் செய்துக்கொண்டிருப்பாயானால், அனந்தரமுனக்கு ஸாலோக்கியபதவி யுண்டாகுமெனவரமளித்து அந்தர்தானமாய்விட்டனர்; அந்த பிராம்மணன்: அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்துக்கொண்டிருந்து, கடைசியில் பரமபதமடைந்தனன். அந்த ஆ கா ச க ங் கை இப்பவும் அவ்விடத்தில் பிரகாசித்துக்கொண்டிருப்பதால், அத்தீர்த்தத்தில் சித்திரை மதாம் சுக்லபக்ஷம் பவுர்ணமி தினம் ஸ்நானஞ்செய்து, ஸ்ரீநிவாசமூர்த்தியை சேவித்தால் அப்படிப்பட்டவர்களுக்கு இஹபரங்களில் சகலசம்பத்துகளும் சகலரோக நிவாரணங்களும் பரத்தில் பரமபதவாசமும் உண்டாகும்.

## பாபவிநாசக தீர்த்த மஹிமை.

பூர்வம் மகமேருவுக்கு வடபுறத்தில் சமஸ்தமுனிகளும் தபஞ்செய்துக்கொண்டிருக்கையில், அவ்விடத்திற் கொருசூத்திரன்வந்து, அம்முனிவர்களுக்கு தண்டம் சமர்ப்பித்து, கைகட்டிநின்றுக்கொண்டு அவர்களைப்பார்த்து, ஸ்வாமீ! யான் சூத்திரன் தபஞ்செய்ய எண்ணியிருக்கிறேன், ஆகையாலெனக்கு, மந்திரோபதேசஞ்செய்து என்னை இரக்ஷியுங்களென வேண்ட, அம்முனிவர்கேட்டு: நீ சூத்திரனாகையால், உனக்கு மந்திரோபதேசஞ் செய்யலாகாது; நீ நிரந்தரம் தேவபிராம்மணர்களை பக்தியுடன் சேவைசெய்துக் கொண்டுவருவாயானால், உனக்கு பரமபதங்கிடைக்குமென்று சொல்ல, அச்சூத்திரன் அவ்விடத்திலொரு பூந்தோட்டம் ஏற்படுத்தி, அவ்வனத்தில் புஷ்பிகளும் பூமலர்களை பிராம்மணர்களுக்கும், தேவர்களுக்கும் சமர்ப்பித்து, அவர்களைச் சேவை செய்துக்கொண்டிருந்தனன். அப்போது அவ்வாசிரமத்தில் தபஞ்செய்துக் கொண்டிருக்கும் சு ம தி யென்றொரு பிராம்மணன்; அச்சூத்திரனுடைய பூந்தோட்டத்துக்குப்போகையில், அவன் கண்டு: பிராம்மணருக்கு அரக்கியபாத்தியாசமநீயங்கள் சமர்ப்பித்து,அதிகபக்தியுடன் சகல சிஸ்ரூஷைகளும் செய்தபின், பிராம்மணன் சந்துஷடியடைந்து, அதிக சிநேஹத்தால் நித்தியமும் அப்பூவனத்திற்குப்போய்க் கொண்டிருந்தனன். அப்படியிருக்க ஒருநாள் அச்சூத்திரன் அவருக்கு நமஸ்கரித்து. சுவாமீ! அடியேனுக்கு மந்திர இரஹஸ்யங்களைப் போதிக்கவேண்டுமென பிரார்த்திக்க அவர்: அவன் செய்யும் சிஸ்ரூஷைகளுக்கு சந்துஷ்டியடைந்து அவன் வார்த்தைகளை நிக்கிரஹிக்க கூடாமல், அவனுக்கு ப ஞ் சா க்ஷ ரி, அ ஷ் டா க்ஷ ரீ, முதலிய மந்திர இரஹஸ்யங்களை உபதேசித்து, அவனால் வேதோக்த்த பிரகாரமாக தேவபிதுர் காரியங்களைச் செய்வித்து, அச்சூத்திரன் கொடுத்து கொண்டுவரும் திரவியமூலமாய் ஜீவித்துவந்தனன். பிறகு சிலகாலஞ்சென்று மிருதியடைந்து

அப்பாபதத்திற்குத்தக்கின நரகங்களை யனுபவித்துங் கிருமி கீடாதி துர்யோ னிகளில் சில ஜன்மங்களெடுத்தும் அப்பாவங்களெல்லாம் கழிந்தபின்னர்; ஒரு பிராம்மணனுக்கு புத்திரனுகபிறந்து ஜாதகர்மம், நாமகரணம், அன்னப் பிராசனம், சௌளோபனயனம், முதலான சமஸ்த காரியங்களைச் செய்தபி ன்னர், பிதாவிடத்தில் சகல வேதசாஸ்திரபுராண இதிஹாசங்களைக்கற்றும் ஞானசம்பத்தை அடைந்தும், முன் செய்த பாபசேஷத்தால் பிரம்மஇராக்ஷ ஸுபிடித்து வனத்தில் சஞ்சரித்துக்கொண்டு இந்த வேங்கடாஜலத்திற்கு ச் சமீபத்தில் பிரவாஹித்துக் கொண்டிருக்கிற சுவர்ன்னமுகரீ தீரத்துக்கு வந்தனன் அப்பொழுது அந்த நதிதீரத்தில் தபஞ்செய்துக்கொண்டிருக்கிற அகத்தியமாமுனிவனைக்கண்டு, அம்முனிவருக்கு நமஸ்கரித்து அஞ்சலீபத் தனுக நின்றுக்கொண்டு ஸ்வாமீ! அடியேனுக்கு இந்த பிரம்மராக்ஷஸதுவம் நீங்கும்படி உபாயஞ் சொல்லவேண்டுமென பிரார்த்திக்க, அம்முனிவர் கே ட்டு: அவனிடத்தில் கருணையுண்டாய், ஓய்! நீ, இவ்விடத்திற்கு வடக்கில் சகலபாவநிவர்த்திக்க வேங்கடாத்திரியென்றொரு பாவதமுண்டு; நீ, அவ்வி டஞ்சென்று, அங்குபிரகாசித்துக் கொண்டிருக்கிற பாபவிநாசதீர்த் தத்தில் ஸ்நானஞ்செய்வாயானுல், உன் பாவங்கள் நீங்கி பிரம்ம இராக்ஷஸ னுல் சம்பவித்த உபத்திரவங்கள் நீங்குமென அனுக்கிரஹிக்க, பிராம்மணன் கேட்டு, மறுபடியும் அம்முனிவருக்கு நமஸ்கரித்து அப்பர்வதத்திற்குச்செ ன்று அவ்விடத்திலிருக்கும் பாபவிநாசகதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து வேங்கடாஜலபதிக்கு தண்டம் சமர்ப்பிக்கையில், சகலபாபநிவர்த் திகளும் பிரம்மரக்ஷோப விமுக்தியுண்டாகி கடைசியில் யோகிஜன துர்லப முள்ள ஸ்ரீநிவாசன் பாதாரவிந்த சேவை கிடைத்தது, ஆகையால் இப்போ ழ்தும் அப்பாபவிநாசத்தில் ஸ்நானஞ்செய்த பேர்களுக்கு சகலபாப நிவர்த்திகளுமாகி பரமபதவாசமும் உண்டாகின்றது.

## கிருஷ்ண தீர்த்தோத்பத்தி.

பூர்வம் கிருஷ்ணன் என்றொரு பிராம்மணன், சேஷாத்திரிக்குச் சென்று, அவ்விடத்திலொரு தீர்த்தமுண்டுபண்ணிக்கொண்டு, அதில் ஸ்நானஞ்செய் து அத்தீர்த்தத்தில் ஸ்ரீமந்நாராயணதியானபரனுக ஆகாரம் நீங்கி, அனேகவ ருஷகாலங்கள் தபஞ்செய்துவருகையில், அவன்மீது புற்றுவைக்கப்பட்டன, அப்போது தேவேந்திரன் அவன் தபசுக்கு விக்னஞ்செய்யவெண்ணி, மேக நாதனை வரவழித்து, ஓய் மேகநாதனே! நீர் சேஷாத்திரியில் தபஞ்செய்துக் கொண்டிருக்கும் பிராம்மணன்பேரில் புற்று வைக்கப்பட்டிருக்கிற தாகை யால், அப்புற்றுகரைந்து அவன் தபசுக்கு விக்கினம் நேரிடும்படிக்கு மிக்கக ர்ஜித்து வர்ஷம் வர்ஷியுமென ஆக்ஞாபிக்க, அம்மேகநாதன் தன் சாமர்த்திய த்தால் சகலலோகத்தார்களும் அறியும்படிக்கு கர்ஜித்து மூன்றுநாள்இராப்ப கல் வருஷிக்க, பிராம்மணன் பேரிலிடப்பட்டிருந்த புற்று நீராகக்கரைந்து

விட்டது; அப்போது, பக்தஇரக்ஷகரான ஸ்ரீநிவாஸமூர்த்தி இவருடைய மனோபாவங்கண்டறிந்து, சங்கு, சக்கிர, கதை, சாரங்கங்களை தரித்துக்கொண்டு இலக்ஷ்மீ சமேதராக கருடவாஹனரூடராய், அந்தப் பிராம்மணனுக்கு பிரசன்னமாகி, ஓய் அந்தணா! நாம் உமது தபசுக்குமெச்சி உமக்கு வரமளிக்க வந்தனம், வேண்டிய வரங்களைக் கேளுமெனா? தபோநிதியாக இருந்த பிராம்மணன: கண்களைத்திறந்துபார்த்து, தன் எதிரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்கு பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து, சுவாமி! அடியேனுக்கு நித்தியமும் உமது பாதசேவை கிடைத்துக்கொண்டிருக்கும்படி அனுக்கிரஹம் பண்ணவேண்டுமென பிரார்த்திக்கையில், பரந்தாமன் அவன் கோரிக்கையின்படி வரமளித்து ஓய் பிராமமணா! நீ இந்த தடாகத்தில் அநேகநாள் தவம்புரிவாயானல் இது உன் நாமதேயத்தால் பிரசித்தியடையக்கடவதென வரமளித்து, அந்தர்தானமாய்விட்டதால், அது கிருஷ்ண தீர்த்தமெனப்படுகின்றது.

## சக்கிரதீர்த்த மகிமை.

பூர்வம் பத்மநாப னென்றொரு பிராமமணன தனக்கு ஸ்ரீநிவாஸ ஸேவையினால் சகலபாப நிவாரணங்களு முண்டாகுமென் றெண்ணி வேங்கடாத்திரிக்குச் சென்று அவ்விடத்தி லொரு ஸரஸை உண்டுபண்ணி அதில் நீராட, அத்தீரத்தி லவனுக்குப் பரந்தாமன் பிரஸன்னமாகி, உனக்கென்னதேவை எனக்கேட்க? அந்தபிராம்மணன்கேட்டு: "தனக்கு பகவான் ஸேவையினால் சகலபாப நிவர்த்திகளு மாய்விட்டன, இனி மோக்ஷம் வேண்டுமென பிரார்த்திக்க, ". பரந்தாமன் கேட்டு, ஓய் பிராம்மணா! நீ இன்னுஞ் சிலகாலம் இந்ததீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, இவ்விடத்தில் தபஞ்செய்துகொண் டிருப்பாயானல், உனக்கு சாலோக்கிய முக்தியுண்டாகுமென வனுக்கிரஹித்து, அந்தர்த்தானமாய்விட்டனர்; பிறகு அந்த பிராமமணன: பகவதாக்ஞையினபடி அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்துகொண்டிருந்தனன்; அப்போது, ஓர் அரக்கன் அவனை பக்ஷிக்கவெண்ணி துரததிகொண்டு வருகையில், அவன் பகவத்தியானபரனாக ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் பாதாரவிந்தங்களை தியானித்துகொண் டிருந்தனன்; அப்போது பரந்தாமன்: அவனிடத்திற் கருணைகொண்டு தனசக்கிரத்தை அழைத்து, நீ அவ்வரக்கனைக் கொலைபுரிந்து எமது பக்தனாகிய பிராம்மணனை இரக்ஷித்துவிட்டு, பின்பு அந்த தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்பவர்களின உபத்திரவங்களை நிவாரணைசெய்துகொண்டு அச்சரசுனிடத்தில் தானே வசித்துகொண்டிருமென ஆக்ஞாபிக்க, அச்சக்கிரம் அத்தீர்த்தத்திலுதித்து அவ்வரக்கனைக் கொலைபுரிந்துவிட்டு, மறுபடியும் அத்தீர்த்தத்தினிடமாகவே வசித்துகொண்டிருப்பதாகையால்,அச்சக்கிரம் உதித்ததால் அது சக்கிர தீர்த்த மெனப்படுகின்றது. அந்தபிராம்மணனும் கடைசியில் பகவதானுக்கிரஹத்தால் பரமபதமடைந்தனன.

## பாண்டவ தீர்த்தோத்பத்தி.

துவாபரயுகத்தில் பாண்டுராஜாவின புத்திரர்களான தர்மபுத்திரர்கள் சூதாடி இராஜ்யத்தை இழந்துவிட்டு, வனவாசஞ் செய்துகொண்டிருக்கையில், அவவிடத்திற்கு நாரதரெழுந்தருளினர். பாண்டவர்கள: அவரைச்கண்டு அாக்கியபாத்தியாசம நீயங்கள்கொடுத்து தண்டம் ஸமர்ப்பித்து,ஸவாமி! நாங்களிவ்வாரணியததில்சகலகஷ்டங்களேயு மனுபவித்துக்கொண்டிருககின்றனம் ; ஆகையால், எங்கள் கஷ்டம் எவ்விதம் நிவர்த்தியாகுமெனவேண்ட, நாரதமுனியானவர் : அவர்கள் துக்கத்தைக கண்ணுற்று, அவர்கள்மீது கருணே பூண்டு, ஓய் பாண்டவாகளே! இவ்விடம் மேற்கு பததுகாததூரத்தில் அநேகதீர்த்தங்களினுல் பிரகாசித்துகொண்டு, வேங்கடகிரியெனு மொரு பர்வத மிருக்கிறது. நீங்களவிடஞ்சென்று, அங்குள்ள புண்ணியதீர்த்தங்களில் ஸநானஞ்செய்து, அப்பர்வததை பிரதக்ஷிணஞ் செய்வீர்களானுல், உங்களுக்கு ஸ்ரீநிவாஸானுக்கிரஹத்தால் இராஜயங்கிடைத்து சகல கஷடங்களும் நிவாரணமாகுமெனமொழிய, அப்பாண்டவர்கள் கேட்டு ஆநந்தமடைந்து, அப்பர்வதஞ்சென்று அங்கிருக்கும் ஸகலதீத்தங்களிலும ஸநானஞ்செய்து, அப்பர்வதத்தை பிரதக்ஷணஞ்செய்தபின அங்குள்ள மற்ருெருதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்துவிடடு, அததீரத்தில் ஸ்ரீமந்நாராயண தியானபரர்களாயிருக்கையில். அவர்களுக்கு ஸ்ரீநிவாஸமூர்ததி பிரசன்னராகி, ஓ பாண்டவர்களே! உங்களுக்குச் சீக்கிரமாக யுத்ததகில் சத்துருஜயலாபமும் உண்டாகுமெனவும, நீங்கள் ஸ்நானஞ்செய்த அத்தீர்த்தம உங்கள் நாமதேயத்தால் பெயர்வழங்கப்படுமெனவும் வரமளித்து அந்தர்த்தியான மாகிவிட்டனர், பிறகு பாண்டவர்கள் ஸ்ரீகிருஷணசஹாயத்தால் யுத்தரங்கத்தில் சத்துருஜயமடைந்து தமது இராஜ்யத்தையுங் கைககொண்டு சுகித்தனர்களாதலால, அச் சரோவரம பாணடவ தீர்த்த மெனபபடுகினறது.

## கபில தீர்த்தோத்பத்தி.

பாதாளலோகத்தில் கபிலமாமுனிவர் அநாதியாய்ப் பூஜித்துவந்த லிங்கமொருநாள் பூமியைப் பிளந்துகொண்டு வெளிப்பட்டிருக்க, பிரும்மாமுதலான ஸமஸ்ததேவர்களும அவ்விடம்வந்து அந்தலிங்கத்திற்கு பூஜாபிரதக்ஷண நமஸகாரங்கள்செய்து, பரமசிவனே தியானிக்கையில், ஈசுவரர் அவர்களுக்குப் பிரசன்னராகி, நீங்களெனன அபேட்சிக்கிறீாக ளியம்புங்களென? அத்தேவர்கள் கேடடு: சுவாமீ, தாமிவிடத்தில்தானே நிவஸித்துகொண்டு, ஸமஸதமாநிடர்களுக்கும சேவைதந்துக்கொணடிருககவேண்டுமென பிரார்த்திகக, பரமசிவன கேட்டு ஓ வானவாகளே, இப்போது பூமியை பேதித்து உதிததலிங்கத்தை இவவிடததில் பிரதிஷ்டை பண்ணிவைத்தால் அதில் யாம நிவஸிககிறேமென திருவாயமலர்நதருள, அத்தேவாகள அந்தலிங்கத்திறகு ஆலயமியற்றி, அதில்

பிரதிஷ்டைசெய்தனர்கள். அப்போது கபிலமாமுனிவர், பாதாளத்தில் தாமநித்தியமும் பூஜித்துவருகிற லிங்கத்தைக்காணாமல், சிலகாலம் வியாகூலமடைந்திருந்து, பிறகு ஞானதிருஷ்டியால் அந்த லிங்கம் பூலோகத்திற்குப் போய்விட்டதென அறிந்துகொண்டு தாமும் பூமியில் பிலஞ்செய்து அவ்வழியாகவே பாதாளகங்கையைக் கொண்டுவந்து, லிங்கத்திற்கபிஷேகம் பூஜாபிரதக்ஷண நமஸ்காரங்கள்செய்தும், இப்போது மவ்விடத்தில்தானே அதருஷ்யராக ஆராதித்துகொண் டிருக்கின்றனர், ஆகையால் அது கபிலேசுவரரெனவும், அவ்விடத்திற்கு கபிலமுனிவர் கொண்டுவந்த பாதாளகங்கையைக் கபிலதீர்த்தமெனவும் பிரஸித்தியடைந்திருக்கின்றது.

## இந்திரதீர்த்தம் முதலான ஒன்பதுதீர்த்தங்களின் மஹிமை.

பூர்வகாலத்தில் இந்திரன் விமானமேறி பூசஞ்சாரஞ்செய்துக்கொண்டு கௌதமாசிரமத்திற்குவந்தனா, அச்சமயத்தில, அமமுனிவருக்கு பத்தினியாகிய அஹலிகை, ஸ்நானஞ்செய்துவிட்டு தலைமயிராற்றிக்கொண்டிருக்க இந்திரனவளைக்கண்டு, அதிக மோஹமடைந்து அந்தராத்திரி வனத்தில பொழுதுபோக்கிவிட்டு இராத்திரி மூன்றுவது ஜாமத்தில் ஒரு சேவலைப்போல ஒலிசெய்தனன், அவ்வொலியைக்கேட்ட கௌதமர், அருணோதயகாலமாய்விட்டதெனத் துயிலெழுந்து, கமண்டலமெடுத்துக்கொண்டு, ஸ்நானஞ்செய்யப்போகிற அவசரத்தில், இந்திரன்: இது நல்லசமயமெனக்கருதி அம்முனிவரின்பரனைக்காலைக்கேகி, அந்த வெதிர்யை வார்த்தைகளினால் மோசஞ்செய்து அவளுடன் ரமிக்கையில், அம்முனிவர்! நதிதீரத்திற்குச்சென்று நக்ஷத்திரங்களைப்பார்த்து இதுவென்ன அதிசயம்! இராத்திரி மூன்றுவது ஜாமத்தில்தானே சேவல் துவனி செவியுற்றதென சிலநேரநதியாநித்து, இது இந்திரன் செய்தமோசமென அறிந்துக்கொண்டு சீக்கிரத்தில திரும்பி பாண்னசாலைக்குவருகையில, இந்திரனும் அஹலியுடன் ரமித்து அக்குடீரத்தைவிட்டு ஸ்வாக்கலோகத்திற்குப்போக உத்தேசித்தவனாக இருந்தனன. அப்போது அம்முனிவர் இவனைக்கண்டு ஓ துராத்மாவே! நீ, எமமைமோசஞ்செய்து இப்படிப்பட்ட துஷ்டகாரியத்தைச செய்தபடியால், இப்பாபத்தாலுனது விருஷணங்களறுப்புண்டு, பூமியில் விழக்கடவையென சாபங்கொடுத்து, தன் பத்தினியாகிய அகலியைக்கண்டு: நீ இவ்வித துன்மார்க்கியாயிருப்பதால் எவர்களுக்குந்தெரியாமல் கல்லாகக்கடவாய் என சபித்து, இனிமேல த்ரேதாயுககாலத்தில் தசரதமஹாராஜருக்கு ஸ்ரீமந்நாராயணமூர்த்தி புத்திரனாகப்பிறந்து இராமனென்னும் நாமம்பூண்டு, சீதையை மணம்புரிய விசுவாமித்திரருடன் ஜனகமா நகரத்துக்குப்போ வதனபொருட்டு இவ்வனத்திற்செழுந்தருளப் போகின்றனர், அக்காலத்தில, இராமன் பாததூள் உன்பேரில்பட நீ நிஜரூபமடைந்து நம்மிடஞ் சேருவாயென அனுக்கிரஹித்து விட்டு, அப்படிப்பட்ட துஷ்டியுடன் சம்பாஷித்ததினால் தனக்குண்டானபாபம் துலைவதற்காக தீர்த்தயாத்திரைகள்

செய்யலாமென புண்ணியக்ஷேத்திரங்களுக்குச் சென்றனர். பிறகு இந்திரன் முனிசாபத்தால் விருஷணமற்றவனாகி வெட்கமடைந்து, சுவர்க்கலோகத்துக்குப்போகாமல், பூலோகத்திலிருந்தனன். அப்போது, இந்தவிருத்தாந்தத்தை அரக்கர்களறிந்து, இப்போது ஸ்வர்க்கத்திற்கு இரக்ஷகனில்லாதலால் தாம் இந்திரலோகத்தை ஆக்கிரமித்துக்கொள்ளலாமெனக் கருதி சமஸ்த சைன்னியங்களுடனே சுவர்க்கத்திற்கருகாமையிற் செல்ல, அவ்விடத்திலிருக்கும் அமரர்கள் அரக்கருடன் சண்டைசெய்ய சக்தியற்றவர்களாகி, இந்திரனைத்தேடிக்கொண்டு எல்லாலோகங்களிலும் சஞ்சரித்துவிட்டு இந்த பூலோகத்திலொருவனத்தில் விருஷணஹீனனாக விருப்பதால், வெளியில்வர வெட்கமடைந்திருக்கின்ற அவ்விந்திரனைக்கண்டு. அவனை அழைத்துக்கொண்டு சேஷாத்திரிக்குச்சென்று, அவ்விடத்திலொரு தீர்த்தமுண்டுபண்ணி, அதில் அவனை மூழ்கச்செய்வித்து அவன் பாபநிவர்த்தியடைந்தபின்பு வேங்கடேசுவரனை நமஸ்கரித்து அவரனுக்கிரஹத்தால் சுவர்க்கலோகத்திற்குச் சென்றனன். ஆகையால் அவ்விந்திரன் ஸ்நானஞ்செய்த தடாகம் இந்திர தீர்த்தமெனவும், வருணன் குமாரன ஸ்நானஞ்செய்து பகவதனுக்கிரஹம்பெற்ற தீர்த்தம் விஷ்வக்சேன தீர்த்தமெனவும், ஸ்ரீவிஷ்ணுவினுடைய சங்கம், சக்கிரம், கதை, கட்கம், சாரங்கம் முதலிய ஐந்தாயுதங்களும் ஸ்நானஞ்செய்த ஸரஸு பஞ்சாயுத தீர்த்தமெனவும், பிரும்மாசிருஷ்ட்டி சாமார்த்தியத்தை அடைவதன்பொருட்டே வேங்கடாத்திரிக்குவந்து ஒரு தீர்த்தத்தையுண்டுபண்ணி யதில நீராடி, ஸ்ரீநிவாசமூர்த்தியை நமஸ்கரித்து அந்த சுவாமியனுக்கிரஹத்தால் ஜகத்சிருஷ்டி கர்த்தவ்வியத்தை அடைந்தனராகையால் அது பிரும்ம தீர்த்தமெனவும், காசிபர்முதலாக சமஸ்த மஹாரிஷிகளும் ஸ்நானஞ்செய்த சரசு, சப்தரிஷி தீர்த்தமெனவும் சொல்லப்படுகின்றன;

## தொட்டி தீர்த்தோத்பத்தி.

பூர்வம் துங்கபத்திரா நதி தீரத்திலொரு அக்கிராரத்தில் பத்மநாபனென்றொரு பிராம்மணன், சகலவேதசாஸ்திரபுராண இதிஹாசங்களைக்கற்றும், அவற்றில சொல்லப்பட்டிருக்கும் தர்மகாரியங்களைச்செய்தும் புத்திரனில்லாமல் அநேகநாள் அந்த நதிதீரத்தில் சிவார்ச்சனை செய்துக்கொண்டிருந்தும் சிவானுக்கிரஹத்தாலொரு புத்திரனைப்பெற்றனன் அந்தப்புத்திரன், வயதுவந்தபின் கலியாணஞ்செய்துக்கொண்டு, தன் மனைவியைவிட்டு தாய்தந்தையற் சொற்கேளாமை விடபுருஷர்களுடன் கூடி விபசாரஞ்செய்துக்கொண்டு, ஒரு தாசியைச்சேர்ந்து, அவளுக்குத்தன் வீட்டிலிருக்குந் தனமெல்லாங்கொடுத்துவிட்டு, பின்பு திரவியமில்லாமையால், திருடர்களுடன் கூடி அரணியத்திடையிலிருக்குங் கிராமங்களில் களவுசெய்து அந்த தாசிக்குக்கொடுத்துவருகையில், ஒருநாளொரு பிராம்மணன்வீட்டிற் பிரவேசித்து, அவனைக்கொலைசெய்து, அவ்வீட்டிலுள்ள, சமஸ்த திரவியங்களையும் அப

ஹரித்தனன், அப்போது, அவனுக்கு பிரம்மஹத்தி உண்டாகி அதிகமாகப்பாதிக்கையில், அந்தப்பிராம்மணன், அந்த பாதைகளைப் பொறுக்கமாட்டாமல், தன் பிதாவிடஞ்சென்று: அப்பா! அடியேனை இரக்ஷியுமெனவேண்ட; அவன் தகப்பனகேட்டு. தனக்கொருபிள்ளைபிறந்து இவ்விதபாவங்களை அநுபவிக்கின்றன ஆகையால், அவைகளெவ்வித நிவர்த்தியாகுமென துயரங்கொண்டிருக்கையில, அவ்விடத்திற்கு தபோநிதியான பரத்துவாஜமுனிவர் தேவவசத்தால் அவ்விடம் எழுந்தருள; அந்த பிராமமணனகண்டு ஓய் பிராம்மணா! நீயேன் வியசனப்படுகிறாய்? உமது வியசனததை எமக்கறிவியுமென, பிராம்மணன: அம்முனிவரைப்பார்தது, அவருக்குத் தண்டஞ்சமாப்பித்து, தன்குமாரன் செய்திருக்கும் பாபத்தையும, அதனால அவன்படுகிற துன்பத்தையும், இககாரணஙகளால் தனககுணடாயிருககிற துககத்தையும் அம்முனிவருககறிவிததனா. அதைக்கேட்டு அம்முனிவா் கொஞ்சகாலந்தியானித்து பிற்பாடு அந்த பிராம்மணனுடன் ஓய் பிராமமணா! காசிக்ஷேத்திரத்திற்குத் தெற்கு நூறறைம்பது காதவழிதூரமும், கிழககு சமுததிரததிறகு மேறகு பதின்காதவழிதூரமும் பொருந்தி சுவான்னமுகி யென்னும் நதிக்குவடக்கில், இரண்டுநாழிகை வழிதூரததில் ஸ்ரீநிவாசமூர்த்திக்கு வாஸஸ்தானமாய், சமஸத புண்ணியதீர்த்தங்களினால் பிரகாசித்துககொணடு வேஙகடாஜலமென பிரசித்தியடைந்த ஒரு பர்வதமிருக்கிறது, அங்கு நித்தியமும் ஸ்ரீநிவாசமூர்ததிககு அபிஷேகஞ்செய்கிற தீர்த்தமெல்லாமொரு பிரதேசத்தில் சேர்ந்து, அது சமஸ்கிருதபாஷையில் கடாஹதீர்த்தமெனவும், திராவிடபாஷையில் தொட்டிதீர்த்தமெனவுஞ் சொல்லப்படுகின்றது. மேலும் ஸமஸ்ததீர்த்தங்களும பகவான் பாததத்தின்கீரில சேர்நதொரு பிரதேசங்கூடுவதால பிரம்மஹததி முதலிய மஹாபாவங்களும நாசமாகிவிடுமாதலால்; நீ உன் புததிரனை அழைத்துக்கொண்டுபோய் அப்பர்வததில அந்த கடாஹதீர்தததில் அவனுக்கு ஸநானஞ்செய்விததால், சகல பாவங்களுந் துலைந்துவிடுமென மொழிந்து, அந்தருஷியர் தனது தபோவனத்திற்கேகினர், அதன்மேல் அந்தபிராம்மணோத்தமன்: மஹாபாதகனான தன்குமாரனை யழைத்துககொண்டுபோய் அப்பர்வதஞ்சேர்ந்து அவனை கடாஹதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்வித்தும் ஸ்ரீனிவாசமூர்த்திக்கு பிரதக்ஷணஞ்செய்வித்தும் அத்தீர்த்ததை பானஞ்செய்கவென ஆக்ஞாபிக்கையில், அப்புத்திரன் பகவானுக்குப் பிரதக்ஷணநமஸ்காரஞ்செய்து பகவானது பாதோதகமான கடாஹதீர்த்தத்தைப் பானஞ்செய்து பலவாராகத் துதிசெய்கையில், அவனுக்குப்பரந்தாமன் பிரசன்னராகி: ஓய்! நீ இநததீாததததைப் பானஞ்செய்தபடியால், உன்பாவங்களெல்லாம் தொலைந்துவிட்டன; உலகத்தில் எந்த மனிதனாவது இந்த தீர்த்தத்தில் விசுவாசமில்லாமலும், பானஞ்செய்யாமலும் போனால் அவன் பிரம்ஹத்தியாதி மஹாபாவங்களுக்குச் சமானமான பாவங்

களையடைவனுதலால், இந்ததீர்த்ததை எப்படிப்பட்ட மஹாதருமாவானாலும் சமசயம்நீங்கி பானஞ்செய்யவேண்டியது என்றும், அப்படி பானஞ்செய்பவர்களுக்குச் சகலபாபநிவர்த்தியும், ரோகநாசமுமாகிறதன்றியில் இஷ்டசித்தியும் உண்டாகுமென மொழிந்து அந்தர்த்தானமடைந்தனர். பதமநாபனெனும் பிராம்மணன் அததீர்த்தமஹிமையை அறிந்து, ஆச்சரியப்பட்டு, பாபநிவர்த்தியுடையவனாய் பரிசுத்வனான தன்புத்திரனை அழைத்துக்கொண்டு உல்லாசத்துடன் தன கிரஹத்திற்குச் சென்றனன்.

## ஸ்வாமி புஷ்கரணி உத்பத்தி.

பூர்வம் பிரம்மாவின் பத்தினியாகிய சரஸ்வதிதேவி ஈசுவரனை ஆசிரயித்து, கஙகாதேவி சமஸ்ததீர்த்தங்களையுமவிட மிக்கபுண்ணியகரமான நதிரூபமாய்விட்டதைக்கண்டு, தான் அக்கங்கையைப்பார்க்கிலுமதிக புண்ணியபிரதானமுடையவளான நதீரூபமடைய வேணுமெனக் கருததுகொண்டு, பிரும்மாவர்த்தக்ஷேத்திரததில் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை தியானித்து தபஞ்செய்துக்கொண்டிருந்தனள் அப்போது பிரும்மாவின புத்திரனான புலஸ்திய பிரும்மா, க்ஷேத்திரத்திற்குவந்து அவளைப்பார்த்து சரஸ்வதிதேவியானவள் அவர் தன்புத்திரனென்றெண்ணி, யவருக்குப்பிரததியுத்தானக வந்தனங்கள் செய்யாமலிருந்தனள் அப்பொழுது புலஸ்திய பிரும்மா சரஸ்வதி தன்னை யவமதிததனளென்றெணணி, யதிக சினமடைந்து, ஓ சரஸ்வதி! நீ நம்மை யவமதித்தாயாகையாலுனக்கு நதீரூபமாயும ஸர்வதீர்த்தோததம முண்டாகாமற்போகக்கடவதென சாப வாக்கியம் நேரிட்டது. அதைச்செவியுற்று,சரஸ்வதி கோபாக்கிராந்த முடையவளாய், ஓய்! நீ எனக்குச்சாபங் கொடுத்தாயாகையாலுனக்கு, ஜன்மித்த புத்திராகளெலலோரும் அரக்கர்களாகக கடவரென மொழிந்தனள். அதைக்கேட்டு புலஸ்திய பிரும்மா: யான்தெரியாமல் சொல்லிவிட்டதற்கு நீயெனக்கிப்படி சாபமளிக்கததக்தன்று, என்னை யனுக்கிரஹிக்கவேண்டுமென பிரார்ததிக்கையில், சரஸ்வதிகேட்டு: ஓய் உனக்குக் கடைசியில் ஜன்மிக்கும் புத்திரன், மிக்கவிஷ்ணுபக்தி யுடையவனாக கல்பாந்த ஸத்தாயியாக இருக்கப்போகிறானென்ன மொழிந்துவிட்டுப் பினனுந்தபஞ்செய்கையில், அவளுக்கு ஸ்ரீமந்நாராயணமூர்த்தி பிரசன்னமாகி, உனக்கென்னவேண்டுங்கேளென மொழிய, அந்த சரஸ்வதி தான் நதீரூபமாக சமஸ்ததீர்த்தங்களைப் பார்க்கிலும் சிரேஷ்டமுடையவளாக இருக்கவேண்டுமெனபிரார்ததிக்கையில், அந்தப்பகவானகேட்டு ஓ சரஸ்வதி! உனக்குப்பிரம்மாவினாலுண்டானசாபந்தவறாது, ஆகையால், நீ நதீரூபமாக சர்வோத்தமத்தை அடையததக்கவளாய் உனக்குயாம்உபாயஞ்சொல்லிகின்றனம்,அஃதியாதெனில்,நீ சேஷாஜலத்தில் சரோரூபமடைந்து,சமஸ்ததீர்த்தங்களிலும் சிரேஷ்டமுடையவளாக இருந்து, உன்னிடத்தில் ஸ்நானஞ்செய்தவர்களுக்கு சகலபாபங்களும் நசித்துவிடும்படிக்குச் செய்து கொண்டிருப்பாயானால், உனனிடத்தில் சம

ஸ்ததீர்த்தங்களும் தனுர்மாசததில் ஸ்நானஞ்செய்து தம்மிடத்தில் பாபாத்துமாக்கள் ஸ்நானஞ்செய்து வருகிறதினுலுண்டாகிய பாபததை நிவர்த்தியடையக் கடவர்களென அனுக்கிரஹித்ததினுல், அந்தசரஸ்வதி ஆப்பர்வததிற்குவந்து, அவிடததில சுவாமி சன்னிதியில் சரோரூபமாக அவதரிதது சுவாமி புஷ்கரணியென்னும் நாமதேயததால், பிரவிித்தியடைந்திருகின்றனள், பிறகு அத்தடாகததின் கிழக்கு, மேறகு, தெற்கு வடக்குதிக்குகளிலும், அககினிதிக்குகளிலும, நிருதி ஈசானிய திககுகளிலும், மார்க்கண்டேயமுனியும, எமன், வாயுவு, குபேரன்' அககினியும், வசிஸடரும் காலவரும் ஸநானஞ்செய்து அவர்கள் மனோபீஷடத்தை அடைந்தனர்களாகையால், அந்தபிரதேசததில் வரிசைக்கிரமமாக மார்க்கணடேய தீர்த்தம், எமதீரததம், வாயுவு தீரததம, குபேர தீரத்தம் அக்கினி தீர்த்தம், வஸிஷட தீர்த்தம், காலவ தீரத்தஙகளெனவும், மத்தியில் சரஸ்வதி தீர்தத மெனவும், வாயுவுதிசையில வராஹ மூர்த்தி வீற்றிருப்பதால் வராஹ தீரத்தமெனவும ஒன்பது நாமதேயங்களால் பிரவிததியடைந் திருக்கின்றது.

## சுவாமி புஷ்கரணி மஹிமை.

பூர்வம், சந்திரவம்சத்திலுதித்த நந்தன மஹாராஜன், தனதிராஜ்யத்தை, புத்திரனுகிய தர்மகுப்தன ஆதீனஞ்செய்துவிட்டு, தான தீர்த்தயாத்திரை செய்து தபோநிஷடனுக இருந்துகொண்டிருநதனன். அப்போது, அந்த தாமகுப்தனொருநாள் சேனைகளுடன வனத்தில் வேட்டை யாடபபோய் அந்தசைனியங்களைவிட்டு, தனிமையாக ஒரு நெருங்கினவனத்தில் பிரவேசிதது, அவ்விடத்தில் சஞசரிக்கையில் சூரிய அஸ்தமானமாய்விட்டது, அபபோது, அவ்வரசனை ஒருசிங்கங்கணடு: பக்ஷிக்கவெணணி, அவனை தூரத்துகையில், அரசன் பயமடைந்தொரு மரமேறினன, அமமரத்தின்பேரில் அதற்குமுந்தியே ஒரு கரடியு மேறியிருந்தது. அதைக்கண்டு, அவ்வரசன் பயமடைந்து நடுங்குகையில்' அக்கரடிகண்டு ஓய் அரசனே! நீ தர்மவான்; எனனைப்போலொத்த ஜீவனகளை ரக்ஷிக்கப்பட்டவன், ஆகையால் உன்னை யான் பக்ஷியாமல் இரக்ஷிககிறேன் எனனிடத்திற்கு வாவெனறழைக்க? அவ்வரசன தைரியமடைந்து அதனிடத்திறகுச்சென்றனன்; அடபொழுது அக்கரடி அரசனுடன ஓய்? நீ தூக்கங்கொள்ள விரும்புவாயாஞல் என்தொடையினபேரில் தூங்குமென மொழிநதது. அதைக்கேட்டு, அவ்வரசன: அதன்தொடையின்பேரில் தூங்கிக்கொண்டிருக்கையில், அச்சிங்கம்: கரடியுடன ஓட! இவ்வரசன நமமைபபோனற துஷடமிருகங்களை சிக்ஷிக்க இவ்வாரணியத்திற்கு வந்திருக்கின்றனன்; அவனைநம்பாமல்கீழே தள்ளிவிடுவாயாஞல், அவனை பட்சித்துவிட்டு என்இருப்பிடஞ் செல்லுகிறேனெனமொழிய, கரடிகேட்டு: சிங்கத்துடன், ஓய்! உலகத்தில் சகலசாஸ்திரபுராண இதிஹாஸங்களிலும் மித்திரதுரோஹத்திறகு பிராயச்சித்த

யில்லையெனவும், அப்பாபம் சேதுஸ்நானம், கங்காஸ்நானங்களாலும் நிவர்த்திக்கக்கூடாதெனவும் சொல்லப்பட்டிருக்கிறதாகையால், என்னை நம்பினவனுக்கு நான் துரோகஞ்செய்யமாட்டேன், போவென்று சொல்லிவிட்டது. அப்பாலந்த தர்மகுப்தன் தூக்கம் விழித்துக் கொள்ளுகையில், அக்கரடி யவன் புத்தி யறியவெண்ணி: ஓய்! எனக்கும் தூக்கம் வருகின்றது, யானும் உன்துடையின்பேரில் படுத்துத்தூங்குகிறேனென்று சொல்லி யவன் துடையின்பேரில் படுத்துக்கொள்ளுகையில்; அந்தச்சிங்கம் முன்போல அவ்வரசனுடன் கரடியைக்கீழே தள்ளிவிடுமென, அவன்: சிங்கத்தின் வார்த்தைக் கிசைந்து, அக்கரடியை கீழே தள்ளுகையில், அது தூக்கம் விழித்து ஒரு கிளையைப் பற்றிக்கொண்டு நின்று, அவ்வரசனைப்பார்த்து: ஓய்! நீ விசுவாச காதகன்; உன்னுடன் சஹவாசஞ் செய்பவர்களுக்கு அத்தியந்த பாபமுண்டாகும், நீ பைத்தியம் பிடித்தவனாக பூமியில் சஞ்சரிக்கக் கடவாயென சொல்லி, அச்சிங்கத்தைப்பார்த்து: ஓய், நீ முன்னால குபேரன் மந்திரியாகிய கந்தருவன்: உனக்கு, கௌதமர் மிருகரூப முண்டாகும்படி சாபமளித்து, அப்பால் கருணையுண்டாகி ஓய், தியானகஷ்ட மஹாமுனி வனவிஹாரத்தின்பொருட்டு மிருகரூப மடைந்திருக்க, உனக்கவருடன் சம்பாஷணையுண்டானால் உன்சாபம் நிவர்த்தியாகுமென மொழிந்தனராகையால், இன்றைக்கென்னுடன் சம்பாஷித்ததினால, உன்சாபம் நிவர்த்தியாகி விட்டதென; அச்சிங்கம் மிருகரூபத்தைவிட்டு, கந்தர்வனாக அழகாபுரிக்கேகினன். அவ்வரசன், பைத்தியம் பிடித்து பூலோகத்தில் சஞ்சரிக்கையில் அவனுக்குப் பிதாவான நந்தன் கண்டு, அதிகதுயரமடைந்து, அப்புதல்வனை அழைத்துக்கொண்டு ஜயமுனியினிடத்திற்குச் சென்று அவருக்கு தண்டம் சமர்ப்பித்து, சுவாமி எனது புதல்வனுக்கு பைத்தியம் எவ்விதம் நிவர்த்தியாகுமென வேண்ட, அம்முனிவர் சற்று தியானித்து, ஓய்; உன் குமாரனுக்கு விசுவாசகாதகத்தினால் பைத்தியம் பிடித்திருக்கிறதாகையால், சுவர்ணமுகீ நதிக்கு வடக்கில், வேங்கடாத்திரி யென்னுமொரு பர்வதமுண்டு, நீ அவ்விடத்திற்கு உன்குமாரனை அழைத்துக் கொண்டுபோய் சகலபாபங்களும் ஹரமாகப்பட்ட ஸ்வாமிபுஷ்கரணியில் ஸ்நானஞ் செய்விப்பாயானால், அவன் பாபமொழிந்து, பைத்தியம் நீங்கி, சுகிக்கக்கடவனென்ன மொழிய, அந்த நந்தன்: தன்புத்திரனை அழைத்துக்கொண்டு போய், அப்பர்வதஞ் சேர்ந்து, அவனை ஸ்வாமிபுஷ்கரணியில் ஸ்நானஞ் செய்விக்கையில், அவனுக்கு பைத்தியம் விட்டு போன பிறகு ஸ்ரீநிவாசமூர்த்தியை நமஸ்கரித்து சுகமாக இராஜயபரிபாலனஞ் செய்துகொண்டிருந்தனன். மற்றும், இந்த கிரிராஜத்துக்கு, அதை தரிசித்த மாத்திரத்தில் அஞ்ஞானிகளுக்கு ஞானமுண்டாவதினால் ஞானகிரி யெனவும், நாராயணனென்னுமொரு பிராம்மணன் அவ்விடத்தில் பகவதனுக்கிரஹ மடைந்தனனாகையினாலே, நாராயணாத்திரி யெனவும், அதை கருத்மான வைகுண்டத்திலிருந்து கொண்டுவந்ததினால், கருடாசல மெனவும், நாராயணமூர்த்தி வராஹரூபத்துடன் வஸித்துக் கொண்டிருப்பதினால் வராஹபர்வத மெனவும், அப்பர்வதத்தின்

மத்தியிலிருக்கும் அஹோபிலத்தில் பகவான் நரசிம்மருபமாய் நிவஸிப்பதினால் ஸிம்ஹாத்திரி யெனவும், முன்னால் அப்பர்வதம் வைகுண்டததி விருந்த தாகையால் வைகுண்டகிரி யெனவும், நிரந்தரம இலக்ஷ்மி நிவஸித்துவருவதால் ஸ்ரீசைலமெனவும், பகவான இலக்ஷ்மி சமேதராக நிவஸிப்பதினால் ஸ்ரீநிவாசகிரியெனவும், சகல மஹோத்சவங்களுக்கும ஸத்தானமாகையால் கலியாணகிரி யெனவும, இந்நாமங்கள் மார்க்கண்ட புராணம், கருடபுராணம, பிரமமோத்தரகாண்டம், பிரம்மாண்டபுராணம், ஸகாந்தபுராணம், வாமன வராஹ பவிஷோத்தரபுராணங்களில் வியாஸாதிகளால் சொல்லப்பட்டிருக்கின்றன, அனறியும் அவ்விடத்தில் கோகறபமெனவொரு சிலாமத்தியில் பிலமுணடு, அதில் ஸநானஞ்செய்பவாகளுக்கு வேறுஜனன மில்லையென்று வெகுபிரசித்தமாயிருககின்றது.

பலசுருதி.

இந்த க்ஷேத்திரத்தில் முன் பரமன், தசரதமகாராஜன், தொண்டமானசசக்கிரவர்த்தி முதலானவர்களும, மானிடர்களும், இராக்ஷஸர்களும், ஸவாமிபுஷ்கரணி முதலான பதினொரு தீர்த்தங்களிலும் ஸநானஞ்செயது, அவரவர்கள் மனோபீஷடங்களை அடைந்தனர்களாதலால, அப்படிப்பட்ட புண்யதீரத்த பரிவிருதமாகிய வேங்கடாசலத்திறகு இபபொழுது எந்தமானிடனாவது வந்து அவவிடத்திலுள்ள புண்ணிய தீரததங்களில ஸ்நானஞ்செயது, கலியுகத்தில் ஸ்ரீநிவாசரூபதரனாய் தமது தர்சனஞ்செய்து கொண்டுவருகிற சகலமானவர்களுக்கும் மோக்ஷங் கொடுத்து கொண்டுவருகிற பகவானுக்கு, பூஜாபிரதக்ஷண நமஸகாரம் செய்துவருவார்களானால்; அவர்களுக்கு, இஹத்தில் சகலசம்பத்துகளும், புத்திரபௌத்திர அபிவிருத்தியும், சமஸ்தரோக நிவர்த்தியும், நிரந்தரம் பகவத்பக்தியு முண்டாகி கடைசியில் பரமபதவாசமும் உண்டாகுமென்று இவ்விருத்தாந்தங்கள் மார்க்கண்டேய புராணமுதலிய ஏழுபுராணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

இப்படிபபட்ட புண்ணியக்ஷேத்திரமும், பிரம்மாவானவர் எம்பெருமானைப்பார்தது சுவாமி! யான் தங்களுக்கு மஹோற்சவம் செய்யநினைந்து இருககிறேனாகையால் அதற்கு உத்திரவு தரவேண்டுமென பலவாறுக வேண்டுகையில், ஸ்ரீநிவாஸமூர்த்தி: அவ்விதமே நடத்துமென ஆக்ஞாபித்தனர்; அதன்பிறகு பிரமதேவரானவர் சௌளமானபிரகாரமாய் சம்பவிக்கும் புரட்டாசிமாதம சுக்லபக்ஷம் சித்தாநக்ஷத்திரத்துடன கூடின சுபதினத்தில் த்வஜாரோகணம்செய்தும், அதுமுதல் ஒனபதுநாள் வரையில் மகோற்சவம் செய்தும், அந்த உற்சவத்தைப் பார்க்கவரும் பிராம்மணர் முதலானவர்களுக்கு பக்ஷியபோஜய சோஷிய லேஹயங்களென்னப்பட்ட நானகுவித அன்னதானங்கள் செய்துஞ் சிரவணநடசத்திரத்துடன் சேர்ந்த தினத்தில் தீர்த்தோத்ஸவம் செய்தனராகையால், இப்பொழுதும் அவ்விதமாகவே பிரதிவருஷத்திலும அந்தமாசத்தில் இரதோற்சவத்துடன் பிரமமோற்சவமும், மற்றும பஞ்சபாவாதி விசேஷோர்த்சவங்களும் செய்துவருகின்றனர்,

## இந்தப் பர்வதத்தில் புராணபிரசித்தமாயிருக்கும்தீர்த்தங்களின் விவரணம்.

குமாரதாராதீர்த்தம், நாரததீர்ததம், பாபவிநாசகதீர்த்தம், பாண்டவதீர்த்தம், கபிலதீர்த்தம், விஷ்வக்சேனதீர்த்தம், அக்நிகுண்டதீர்ததம், ஸப்தரிஷி தீர்ததம், தும்புருதீர்த்தம், ஆகாசகங்காதீர்த்தம், சக்கிரதீர்த்தம், கிருஷ்ண தீர்த்தம், இந்திரதீர்த்தம, பஞ்சாயுததீர்த்தம், பிரம்மதீர்ததம், தொட்டிதீர்த்த முமாம்.

## சுவாமி புஷ்கரணியிலுள்ள ஒன்பது தீர்த்தங்களின் விவரணம்.

கிழக்கில், மார்க்கண்டேயர்தீர்த்தம்—தென்கிழக்கில, ஆக்னேயதீர்த்தம்—தெற்கில், எமதீர்த்தம்—தென்மேற்கில், வசிஷ்டதீர்த்தம்—மேற்கில், வாயுதீர்த்தம் வடமேற்கில், வராகதீர்த்தம்—வடக்கில், குபேரதீர்த்தம்-வடகிழக்கில், காலதீர்த்தம்-மத்தியில், சரஸ்வதிதீர்த்தமுமாம்.

## தத்கால ஸ்திதி.

இப்போது இந்தத் திருப்பதியானது, சித்தூர்ஜில்லாவைச்சார்ந்த, சந்தரகிரி தாலுகா சப்டிவிஜன் அல்லது டிப்டி தாசில்தாரிருக்குமிடம் இது மேல்திருபபதியென்றும, கீழ்திருப்பதியெனறும், இரண்டு பிரிவுகளாக வகுக்கப்பட்டிருக்கிறது.

கீழ்திருப்பதியானது, சென்னையம்பதிக்கு எண்பது (80) மைல் தூரத்திலிருக்கிறது. அதாவது, சென்னையி லிருந்து பொமபாயிக்குப் போகும் புகைவண்டி மார்க்கமானது இந்தகீழ்த்திருப்பதிக்கு 6 மைல் தூரத்தில் ரேனுகுண்டா ஸடேஷன வழியாகப் போவதால், அநேக பிரயாணிகள் சுலபப் பணச்செலவில் இந்த திவ்வியஸ்தலத்துக்கு வரத்து போக்காயிருக்கிறார்கள். இந்தக்கீழ்த்திருப்பதியை கோவிந்தராஜ பட்டணமெனறு சொல்வதுமுண்டு. இந்தப்பெயர் வந்ததற்குக்காரணம் பலர்பலவிதமாகச் சொனனபோதிலும், இவ்விடம் கோவிந்தராஜபெருமாளுடைய பெரியகோயி லிருப்பதால், இப்பெயர் வழங்குகின்றதென்று தோற்றுகின்றது.

இந்தக்கோவிந்தராஜபெருமாள், ஒருகாலத்தில் தக்ஷணதேசத்தில் சித்திரகூட்டம அல்லது சிதம்பரத்தி லிருந்ததாகவும், அப்போது அரசாண்ட ஓர் நபாபு, அந்தவிக்கிரகத்தை யெடுத்துக் கொண்டுபோய் தனவீட்டு வாசற்படியிற் போட்டுக்கொண்டதாகவும், பிறகு ஷை நபாபை வைததுங்கொண்டிருந்த "தில்லை" என்னும் தாசியானவள் வழக்கப்படி கையில் ஒரு சொம்பு ஜலத்தை யெடுத்துக்கொண்டு ஒருநாள்இராத்திரி ஷைநபாபு வீடடுக்குப்படுக்கைக்குப்போகையில் தன்காலுக்கு ஷை கோவிந்தராஜர்விக்கிரகம் தாக்க, இஃதெனனவென்று அவள் பார்க்கும்போது, திவ்யஸ்வருபததுடனிருந்த இந்த விக்கிரகத்தைக் கண்டு, பயந்து, தனது கையில வைத்திருந்த சொம்பு

ஜலத்தை யதன்மேல் விட்டு வணங்க: அந்தக் கோவிந்தராஜப் பெருமாள் பிரத்யக்ஷமாகி, தன்னை ஒரு வண்டியி லேற்றிக்கொண்டு வடதேசத்துக்குக் கொண்டுபோகும்படியாகவும், அப்படிக் கொண்டு போகச்சே எவ்விடம் தம்மைக்கொண்டுபோகும் வண்டி முறிந்து வழிச் செலவுக்கில்லாமல் போகிறதோ, அவ்விடம் வைத்து ஒரு சிறியகோயில் கட்டிவணங்கினால், இகபர சுக போகங்களை யீவதாகத் திருவாய் மலர்ந்தருளியதாகவும்; அதன்மேல், அந்தத் தில்லை யென்னும் தாசியானவள் வீட்டுக்கு ஓடிவந்து தன்சகோதரியாகிய **பொன்னி** என்பவளிடஞ் சொல்ல, அவளும் சம்மதித்து அவர்களிடமிருந்த பொருள்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு, இந்தக் கோவிந்தராஜர் விக்கிரகத்தை வண்டியின்மீது யெடுப்பித்துக்கொண்டு, வடதிசையை நோக்கி வருகையில், திருப்பதிக்குச் சமீபித்தபோது, அந்த விடம் கோவிந்தராஜ பெருமாளுக்கு உவப்பானதாக விருந்தமையால் முன் திருவாய்மலர்ந்தருளியபடியே வண்டிமுறிந்தது, உடனே தில்லை யென்னும் தாசியானவள் தனது பாகத்து [illegible] சேர்ந்த பொருளையெல்லாஞ் செலவழித்து இப்போது இருக்கும் பெ[illegible]கோயிலுக்குள்காபகிரஹ கோயிலைக்கட்டிவைத்துவணங்கிவந்ததாகவு[illegible]வளுடைய சகோதரியாகிய **பொன்னி** யென்பவள் தன்பாகத்துக்குவந்த பொருளை செலவுசெய்து இப்போதிருக்கும் பொன்னிவாய்க்காலை வெட்டிவைத்ததாகவுஞ் சொல்லுகிறார்கள் மேலும், தில்லை யென்னுந்தாசிவணங்கி முக்திபெற்றதனால், தில்**லைகோவிந்தராஜர்** என்னும் பெருமாளிருக்கும் இவ்விடத்திற்கு கோவிந்தராஜர்பட்டணமென்று சொல்லப்படுகிறது. இது கூடியவரையில் அழகியபட்டணம். இதில் சுமார் பத்தாயிரம் ஜனங்கள் வசித்து வருவதால், இப்போது சப்மெஜிஸ்திரேட் கச்சேரியும், முனிசீப் கோர்ட்டும், போஸ்டாபீசும், போலீசு ஸ்டேஷனும், ஆசுபத்திரியும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. கடைவீதியில், உணவுக்கு வேண்டிய பதார்த்தங்கள் நயமாகவிற்கப்படுகின்றதன்றியில், செம்மரங்களால் செய்யப்பட்ட பொம்மைகள், பழமுதலான பாத்திரங்கள், வெங்கல, தாம்பிர விக்கிரகங்கள், பாத்திரங்கள், துளசிமணிகள், புட்டிக்கூடைகள், மூங்கிற்றடிகள், ஸ்திரீகளணியும் வளையல்காப்புகள், மாமந்தூரிலிருந்து ஒட்டர்கள் கொண்டுவரும் சந்தனம் தேய்க்கும் சாந்துகற்கள் முதலானதுகளை யாத்திரைக்காரர்கள் விசேஷமாக வாங்கிக்கொண்டு போகிறார்கள். முநிசிபாலிட்டி ஸ்தாபிக்காதிருந்தபோதிலும், வீதிகள், வீடுகள் சுத்தியாக விருக்கின்றன. பன்றிகள் அதிகமாயிருப்பதால் கக்கூசுகள்வேண்டியதில்லை. உஷ்ணகாலத்தில் கொசுக்களாலும், உஷ்ணத்தினாலும் தூங்குவோருக்கு கஷ்டமுண்டாகும். நகரத்தைச் சுற்றிலும், ஆழ்வார்தீர்த்தம், இராமதீர்த்தம், இலக்ஷ்மணதீர்த்தம், நரசிம்மதீர்த்தம், என்றுபல தீர்த்தங்களிருந்தபோதிலும், குடிப்பதற்கு சிறந்தபானம் நரசிம்மதீர்த்தமே. இந்த தீர்த்தமிருக்கும் இடத்தை இராபின்சன்பார்க்கு என்று சொல்லப்படும். அதாவது சமீபகாலத்துக்குமுன் சித்தூரில் கலெக்டராகவிருந்த மேஸ்டர் இராபின்சன் துரையவர்கள் முய

ற்சியால் இதை செப்பநிடப்பட்டு சீர்படுத்தப்பட்டது. நகரத்தில் பற் பல ஜாதியார்களிருந்தபோதிலும், மலைக்குச் சமீபமாக அநேக பட்டு நூற்காரர்களிருக்கிறார்கள்- அந்த வீதிககு பரஸ்தல வீதி யென்று சொல்வதுமுண்டு. அதாவது பரஸ்தலத்தார் வந்து தங்குமிடம் இந்தப் பட்டு நூற்காரர்களும், வேறு சில பிராம்மணர்களும், சாத்தாதா வைணவர் களும் தூரதேசங்களிலிருந்து வரும பரஸ்தலத்தாரை வெகு தூரத்தில் போய் எதிர்கொண்டு அழைத்து வந்து, தமது வீடுகளில் ஜாகைசெய்துகொடுத்தும, வேண்டிய உதவிகள் செய்தும், செயவிப்பித்தும, பரஸ்தலத்தார் தமது சொந்த தேசங்களுக்குத் திரும்பி போகும்போது, அறை ஒன்றுக்கு ஆறு அணு, அல்லது ஆள் ஒன்றுககு அரையணு வீதமாகவாடகையையும, வெகுமானத்தையும பெற்றுக்கொள்ளுவார்கள் பெரும்பான்மையான அறைகள சிறியவைகளாகவும், அசவுக்கிய முள்ளவைகளாகவு மிருக்கும இவ்விடங்களில் வியாபாரஞ் செய்ய சராப்புகள் சில்லரை வியாபாரிகள அடிககடி வருவார்கள். ஜாககிரதையாக விருந்தால் திருடர்பயமில்லை. இந்தக் கோவிந்தராஜப்பட்டணத்தில் பதினைந்து பெரியகோயில்களும், வேறுசில்லரைக் கோயில்களுமிருந்து காலக் கேட்டினால் அநேகஞ் சீரணமாகிவிட்டன. சிலதுகளுககு பூஜைமுதலானதுகளும் கிடையா. இபபோது பிரபலமாகவிருப்பது இரண்டு. அவ்விரண்டிற்சிறந்தது,

## கோவிந்தராஜர் சன்னிதி.

இஃது சிற்பலங்காரமும், தீர்த்த கோபுரங்களில் சிறந்த பெரிய கோயில், இதற்குள் கோவிந்தராஜபெருமாள் படுத்துக்கொண்டு சேவை சாதிக்கிறார். விக்கிரஹம் மஹாபெரியதாகவும், அழகாகவு மிருக்கிறது, இந்தச் சுவாமிக்கு கல்பூர ஆராதனைக்கொடுக்கவிரும்புவோர, ஒருருபாய் காணிக்கைக் கொடுக்கவேண்டும. அடுதது இருக்கும அம்மனுக்கு கல்பூர ஆராதனைக்கொடுக்கவிரும்புவோர் நாலணுகொடுக்கவேண்டும; இந்தக் கோயிலுக்கு எதிரிலிருக்கும் சதுரதீர்த்தம, பூமிமட்டத்துக்குள் சிறந்து விளங்குகின்றது. இந்தக கோயிலுககுள் ஆழ்வார் ஆசாரியரால் கோவில்களிருக்கின்றன. கோபுரம சமுத்திரமட்டத்துக்குமேல் 63,4 07 அடி உயர்ந்து பெரிதும், சிறந்ததுமாகவிருககிறது. இந்தக் கோவிந்தராஜரை திருப்பதி வேங்கடரமணசுவாமியின தமபியாரென்றும், அநத வேங்கடரமண பெருமாளை தரிசித்தபிறகு இவரை தரிசிபபதுவழக்கம் இப்போது இது திருப்பதிமஹந்தவர்களுடைய ஆதீனததிலிருககிறது. கோயிலின நித்தியபடி 32 சேர அரிசி மாதாந்திர சிப்பந்தி செலவு சுமார் நூறு ரூபாய். சுமார் இருபதினாயிரம் விலையுளள ஆபரணங்களிருக்கின்றன. இந்தப் பெருமாளுக்கு வைகாசிமாதத்தில் இரதோற்சவம் வெகுவிமரசையாக நடககின்றது. சித்திராபவுரணிமியில் பொன்னிவாய்க்கால் உற்சவம் நடந்துவருகிறது.

# இராமசுவாமி சன்னிதி

இதுவும் கீழ்திருப்பதியிலிருக்கும் புராதன அழகிய திவ்வியஸ்தலம். ஆனால் இது கோவிந்தராஜர் சன்னிதியைவிட சிறியதும், சிறந்ததுமாகவிருக்கிறது. இந்தக்கோயிலில் கோதண்டராமர், அம்மன், விக்கிரங்கள அழகாகவிருக்கின்றன. இந்தக்கோயிலுக்கு மாதம் 50-ரூபாய் செலவாகின்றது. 4 சிப்பந்திகள் கோயில் பிரசாதத்தால் ஜீவனஞ்செய்துவருகிறார்கள். நித்தியபடி தரம் 11-படி அரிசியும், சனிவாரஙகளில் 18-படி அரிசியும் செலவுசெய்து வருகிறார்கள். மைசூராஜருடையத் ததீயாராதனை கிரமமாக நடந்துவருகிறது. கோயிலுக்குள் அழகிய சிறிபுஷ்பம், நந்தாவனமு மிருக்கிற தாறியில, சமீபகாலத்துக்குமுன் மஹாந்தவாகளால், ஒன்றரைலக்ஷம்ரூபாய செலவுசெய்து தங்கதுவஜஸ்தமபததை புதுப்பிக்கப்பட்டது. இந்தக்கோதண்டராமசுவாமிக்கு கல்பூராஆராதனைக் கொடுக்க விரும்புவோர் அரைரூபாய் கொடுக்கவேண்டும். இந்தககோயிலுக்குசுமார் ஐயாயிரமரூபாய்விலையுள்ளநகைகளிருக்கின்றன. பஙகுனிமாதம் இரதஉற்சவம் வெகு விமரிசையாக நடந்துவருகிறது இந்தக கோயிலுக்கு கோவிந்தராஜபெருமாள் கோவிலின மேளககாரர்கள் வந்து,நான் வாத்தியஞ்செய்யவேணடும்.

இந்த கீழ்திருப்பதியில் வேறு சிறுகோயில்களும் உற்சவங்களுமிருந்த போதிலும், **கங்கம்மாள் ஜாத்திரையே** விசேஷமானது. இது எப்பிரல் அல்லது மேமாதத்தில் தொடங்கி பத்துநாள் கொண்டாடப்பட்டு வருகிறது இந்த ஜாத்திரையில் பலஜாதியார் விநோத வேஷங்களைப்பூண்டு குடித்து நடிக்கிறார்கள். ஆடு, மாடு, கோழி பலிகொடுத்தலும், பொங்கலவைத்தும், கலிமண்ணினாலும், வைக்கோலினாலும் பொம்மைசெய்து கடைசிநாளில சுட்டுவிடுகிறார்கள். இது ஒருவித கிராமதேவதை, பிராமணர்களும் வணங்கிவருகிறார்கள். இத்தியாதிகள் பல விருந்தபோதிலும் பரஸதல யாத்திரைக்காரா விசேஷமாகக் கருதிவருவது மேல்திருப்பதியே.

# மேல்திருப்பதி மஹாத்துவம்.

மேல்திருப்பதியென்பது, கீழ்திருப்பதி அல்லது கோவிந்தராஜப்பட்டணத்துக்குச் சுமார் ஒருமைல்தூரத்தில் தோன்றும் பெரியமலை இதைத் திருமலை யென்றுஞ்சொல்லுகிறார்கள். இது தென்கிழக்கு திசையிலிருந்தாரம்பித்து, தென்மேற்காகமுடிகிறபலசிறுமலைகளின் தொடர்ச்சிகளாகவிருக்கிறது மலையின் வடக்குமுனை கடப்பை ஜில்லாவரையில் பரவியிருக்கிறது, கீழ்திருப்பதியிலிருந்து இந்த மலையின் அடிவாரம் ஒருமைல் தூரததிலிருக்கிறது. இந்தத்திருமலையின் உன்னதசிகரத்தின் உயரம் 2000-அடி. மலையின் அகலம் 100-சதுரமைலுள்ளது. பூர்வம் மகமேருபர்வதத்தை கருடபகவான் எடுத்துக் கொண்டுப்போகையில் அதில் ஒரு சிறு குன்றுதவறி விழுந்ததாம்; அந்தக்கு

ன்றுதான் இந்தத்திருப்பதிமலையாம். கலியுகம்பிறப்பதற்கு 28-யுகங்களுக்குமுன்கங்கைகதிதீரத்திலிருந்த ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் இந்தமலைக்கு எழுந்தருளியதாக ஒரு சாசனத்தில் காணப்பட்டாலும் வேறொருசாசனத்தில் கிறிஸ்துபிறப்பதற்கு 3,100-வருஷங்களுக்குமுன் இந்தமலையின் கோயில் கட்டப்பட்டதாக தெரியவருகின்றது. இந்தத்திருப்பதிமலையின் பலபாகங்களுக்கு பலபெயர்களுண்டு. இப்பெயர்களில் "சேஷாஜலம்" என்னும் இடத்தில் தான் பெரியகோயில் கட்டப்பட்டிருக்கிறது இக்கோயிலுக்கு மூன்று பிரகாரங்களிருக்கின்றன. முதலபிரகாரம் பிரும்மாவினாலும், இரண்டாம் பிரகாரம் பரிக்ஷித்து மஹாராஜாவினாலும், மூன்றாம்பிரகாரம் ஜனமேஜய மகாராஜாவினாலும் கட்டப்பட்டு, அநந்தரம் 600 - வருஷங்கள் சென்ற தன்மேல் விக்கிரமார்க்கமகாராஜனால் ரிபேர்முதலான மாரமத்துகளை செய்யப்பட்டதாம். பிறகு சோழராஜாக்களால் புதுப்பிக்கப்பட்டு தொண்டமான் சக்கிரவாத்தியின் காலத்தில் சீரும் பேரும் பெற்றுசிறந்தோங்கிவந்தது. இந்தக்கோயிலுக்கும் கீழ்த்திருப்பதியாகிய கோவிந்தராஜபட்டணத்துக்கும் 6-மைல் தூரமிருக்கிறது இந்த ஆறுமைல்தூரமும் நேரானவழியாகவிருக்காமல், அநேக கரடுகளும், மேடுகளும், பள்ளங்களும் தாண்டிவரவேண்டும். விசேஷமான மேடுகள் ஏழு ஆனதுபற்றியே, இந்தத்திருப்பதிசுவாமியை "ஏழுமலைநாதரென்றும்" அநேக தேசங்களுக்கு வடக்கேயிருப்பதனால், வடமலைநாதரென்றுஞ் சொல்வதுமுண்டு. இந்த ஏழுமலைகளையும் அநந்தலக்ஷ ஜனங்கள் கஷ்டத்தைப்பாராட்டாமல் நடந்துபோய் சேவிக்கிறார்கள். செல்வவான்களாகிய சிலர்மாத்திரம், டாம்ஜா, பல்லக்குகளில் போவது வழக்கம். சாதாரண டாம்ஜாவுக்கு போகவரக் கூலி மூன்று ரூபாய்; பல்லக்கு அல்லது மேனாவில்போய் வரக் கூலி 8-ரூபாய் இவ்விதமாகக் கூலியைக்கொடுத்து அல்லது நடந்துவந்து சேவிக்கும்படியான கோயில், மிக்கஅழகாகவும் வெளிபிரகாரம் 137-கெஜநீளமும், 87-கெஜஅகலமுமுள்ளதாகவும் இருக்கிறது. சில வருஷங்களுக்குமுன் கரப்பகிரஹமும், கோபுரமும் தங்கமுலாம் பூசப்பட்டிருந்து இப்போது கிலமாகவிருக்கிறது.

## திருப்பதி வேங்கடரமண சுவாமி.

இந்தக் கோயிலுக்குள் இருக்கும் பிரதானசுவாமியை வேங்கடாஜலபதி, சேஷாஜலபதி, கோவிந்தசுவாமி ஏழுமலையான், வடக்குமலையான் என்ற பெயர்களால் துதிக்கிறார்கள். இந்த விக்கிரகம் ஏழடிஉயரமும், 4-அடி அகலமுமுள்ளது. ஒருகையில தாமரைமலரையும், ஒருகையில் தண்டத்தைதரையிலூன்றிக்கொண்டிருக்கும் பாவனையாகவிருக்கிறது. இதற்கு சடைமுடியும், நாகபூஷணங்களும் இருப்பதால், இது ஒருகாலத்தில் தண்டாயுதபாணியாகிய சிவசுப்பிரமணியராக விருந்ததாகவும், ஸ்ரீமது இராமாநுஜாசாரியார் திக்விஜயம் செய்யப்போனபோது, தமது சத்பக்தி சாமார்த்தியங்களால் சைவர்களோடு வாதித்து, சுவர்ண சங்கு சக்கிரங்

களைச் செய்துவைத்து கோயிலின் கதவுகளை மூடியிருக்கும்போது, தாம் சேஷாவதாரமாகி ஒரு சிறு துவாரத்தில நுழைந்துபோய் அந்த சுவர்ன சங்குசக்கிரங்களைத தரிப்பித்ததாகவும் சிலா சொல்லுகிறார்கள். இந்தப்பெருமாளுக்கிருக்கும்ஆபரணாதிகளுக்கு விலை மதிப்பிடக்கூடவில்லை. இவர் சகலகஷ்டங்களைநீக்கி இஷ்டசித்திகளை யீவாதாகச் சொல்லப்படுவதால், தக்ஷணதேசத்தாரும், வடதேசத்தாரும் எராளமானதிரவியத்தை காணிக்கையாகவும, உடனுகவும், வட்டியுள்பட உண்டியாகவஞ் செலுத்திவருகிறார்கள். தக்ஷணதேசததில் அநேகர்வீடுகளில் திருப்பதிஉண்டி யிருப்பதைப்போலவே வடகசே, "பாலாஜி" என்று வணஙகி, பா லி ஜி பா க மென்று தஙகள் வரும்படியில் பிரதிதினஞ் சேர்த்துவைதது வருஷாந்திரத்தில், தாமே நேராகவாவது, அல்லதுதம்உத்தியோகஸதர் மூலியமாகவாவது காணிககையைசெலுததுவது வழக்கம்.

## திருப்பதி உண்டிகைக்குக் காரணம்

ஒரு காலத்தில் இந்த வேங்கடேசப்பெருமாள் வனததில் வேட்டையாடி வரும்போது காாவேட்டி நகரத்துக்குச் சமீபததிலிருக்கும் நாராயணவரததின் இராஜனுகிய ஆகாசராஜன் குமாத்தி பத்மாவதி யென்னும் கன்னிகையும், அதேவனததில்வந்து பூகொய்து விளையாடிக் கொண்டிருக்கச்சே, இந்த வேங்கடேசர்கண்டு: மோகிதது கலியாணஞ் செய்யவேண்டுமென்று அந்தக்கன்னிகையின் தந்தையைக்கேட்க, அவர்கலியாணஞ்செலவுக்காக பெரியதுகையை விரும்ப: சுவாமியானவர்; பிரும்மருத்திராதிகளறிய குபேரனிடம் 1,14,00000இராமடாணிகளைஅதாவது1,14,00C0000 ரூபாய் கடன்வாங்கி கலியாணஞ்செய்துக்கொண்டாராம். அந்தக்கடனை தீர்ப்பதற்காக தமது பக்த்தர்களுடைய குறைகளைதீரத்து உண்டிமுதலானதுகளை வாங்குவதாக சொல்லுகிறார்களா. இதுகாரணததைப்பற்றியே வருஷத்தில் பலநாட்களிலும் முக்கியமாக வருஷாந்திர பிரம்மோற்சவஙகளில் எண்ணிறந்த பகதர்கள் காணிக்கையாகவும் உண்டிகை யாகவுஞ் செலுத்துகிறார்கள். இப்படி ஏராளமான பொருள் சேரவே அநேக குருநிலமன்னர் முதலானவர்கள் இந்தக் கோயில் பொருளை அபகரிக்க ஆரம்பித்தார்கள்.

## சரித்திரம்.

கி. பி. 1753-ஹு மகமது காமூல் என்பவர் நெல்லூரிலிருந்து வந்துகோயில்பொருளை கொள்ளையிடப்பார்த்தும் காரியம் சித்திபெறுமல் மறுபடியும் 1756-ஹு படையெடுத்து வந்தார். அப்போதுங் காரியம் சித்திபெறவில்லை. 1757-ஹு நஜிபுல்லா படையெடுத்துவந்தும் காரியசித்திபெறவில்லை. 1758-ஹு மராட்டியசேனைத் தலைவரான கோபாலராயர் படையுடன் வந்து கோயிலைக்கட்டிக்கொண்டார். கர்னுடிக் நபாபின் தம்பியாகிய அப்தல் வஹப் என்பவர், பிராஞ்சுகாரதளாதிபதியாகிய லாலியுடன் கூடி படையெடுத்துவந்தார். ஷை வருஷம் மார்ச்சிமீ கோபாலராயரே கோயிலைப்பிடித்து

கொண்டார், மேலும் ஷை வருஷம் ஜாலைஸ் பவிராவும், நாராயண சாஸ்திரியும் கடும்போர்செய்து கோயிலை சுவாதீனமாக்கிக்கொள்ள அப்போது இங்கிலீஷ் கவரன்மெண்டார் 300-சிப்பாய்களையும், 15-ஐரோப்பியர்களையும் அனுப்ப; அவர்களில் 80-சிப்பாய்கள் மாத்திரம் மலையின்மேல் போக அநுமதிபெற்றார்கள். அவர்கள்போய் கடும்போர்செய்ய சில கொலைகளும், கொள்ளைகளும் நடந்தன. பிறகு 1759-ஆ மோகராலர், பாகார்கள் என்ற துஷ்டர்கள்கூடி சண்டைசெய்து கோயில் சொத்தை கொள்ளையடிக்கவந்தமையால் அப்போது அந்தக்கோயில செலவில் 150-சேவகர்களையும் 500-அங்காமிகளையும் வைக்கப்பட்டன. 1762-ஆ மலையின்பேரில் பெரிய குழப்பங்களுண்டாகி அநந்தரம் மஹந்துக்களுடைய ஆதீனமாயிற்று.

## மஹந்துகளின் விவரம்.

மஹந்துக்களென்றால் மஹாத்துமாக்களாம். இவர்கள் வடதேசத்திலிருந்துவந்த பிரம்மச்சாரி பிராம்மணர்கள். இவர்களில் பிரதானமானவர், ஆதியில் வடதேசத்திலிருந்துவந்து தமக்கு யாதொரு கல்வியும் கைத்தொழிலுந் தெரியாமையால், ஓர் கோடாலியைச் சம்பாதித்து பிரதிதினமும் மலையின்மேலிருக்கும் காடுகளிற் சென்று கட்டை விறகுகளை வெட்டிக்கொண்டுவந்து வேங்கடேசுவரசுவாமி சன்னிதிக்கும், மற்ற பரஸ்தலத்தாருக்கும் கொடுத்துக்கொண்டு, அவைகளுக்குப் பதிலாகத் தளிகை முதலான பிரசாதங்களைப் பெற்று புசித்து பரமபக்தராக விருக்கும்போது, இந்தக்கோயிலின் சுதந்தரத்துக்காக அநேகர் எனக்கு, உனக்கு, என்று போர்செய்து வருகையில், மத்தியஸ்தர்கள் இந்த சுதந்தரத்தை லவுகீக சம்சார சம்பந்தங்களற்ற மேற்படி பிரம்மச்சாரிபிராம்மணரிடங் கொடுத்தால், கோயில் காரியங்கள் கிரமமாக நடக்குமென்றுநம்பி அவரையே தர்மகர்த்தாவாகநியமித்தார்களாம். அவரும் இந்த தேவகாரியத்துக் கிசைந்து காரியங்களை நடத்தி வந்தார். இப்படியிருக்கும் காலத்தில, இந்தக்கோயிலின சம்பத்து நாளாவட்டத்தில் விருத்தியாகி வந்தமையால், அதைக்கொள்ளையிட விரும்பிய ஒருநபாபானவர் அந்த மஹந்தைப் பிடித்துவந்து கால்களுக்கு விலங்குகளைப்பூட்டி சிறையில் வைத்தும, அநேகஆயிரம்ஜனங்களுள்ள சேனைகளைக்கொண்டுபோய்திருமலையின் அடிவாரத்தைச்சுற்றிலும் முற்றிகைப்போட்டிருந்தார். அக்காலத்தில் அந்தத்திருமலையில் யானைகள் அதிகமாகவிருந்தன. ஒருநாள் காலையிற் தற்செயலாக அநேகக் காட்டுயானைகள் வந்து நபாபு சேனைகளை கண்டதுண்டமாக அடித்து இடித்து உதைத்து தும்ஸமாக்கினபடியால், அந்த நபாப் முதலானவர்கள் பயந்து, இது வேங்கடேசருடைய செய்கையென்று யெண்ணி, அவருக்குச் சிலமாணியபூமிகளையும் விட்டு மஹந்தை விடுதலையாக்கினாராம். அந்தமஹந்துக்கு **அத்திராம்பாலாஜீ** யென்று பெயர் வழங்கியதாகச் சொல்லுகிறார்கள். பிறகு **சேவதாஸ், தர்மதாஸ்** மஹந்துக்களுடைய காலத்தில் கோயில்காரியங்கள் கிரமமாகவே நடந்துவந்தன. சுமார் 50 வருஷங்களுக்கு முன்னிருந்த

பலராமதாசு என்னும் மஹந்தானவர் சீர்கெட்ட நடவடிக்கைகளை யனுசரித்துவந்தமையால், அவரை அந்த மஹந்துவேலையில் நின்று நீக்கி கோவர்த்தனதாஸ் என்பவரை மஹந்தாக நியமிக்கப்பட்டது. அதனமேல் பலராமதாசுக்குச் சங்கடமுண்டாகி, அடுத்த கிராமங்களிலிருக்கும் ஜனங்களைக்கூட்டிக்கொண்டுவந்து கோயிலைத்தாக்கின தில், புதுமஹந்தும், சீடர்களும், திருமாளிகைகளில் புகுந்து கதவை மூடிக்கொண்டார்கள். அதனால் அநேகருக்குக் கடுங்காயமுண்டானதன்றியில் கொலையும் நடந்தது. பிறகு போலீசார்போய் கலகக்காரரைப் பிடித்து கைதிகளாகக முயலுகையில், அவரும அவரது சீடர்கள் சிலரும் தற்கொலை செய்துகொண்டதாக மேஸடர் காகஸ துரை யெழுதிய சித்தூர் டிஸடிரிகடு மானுயூல் புஸதகத்தில் கண்டிருக்கிறது. மஹந்துகளெல்லாம் பிரம்மச்சாரிகளானபடியால், தமது வடதேசத்தைச்சார்ந்த பிராமணவாலிபரை ஸவீகாரமாகப்பெற்று தமக்குப் பிறகு திருமலையின சொத்துக்கு ஆதினபாளாகிய மஹந்துக்களாக நியமித்தல் வழககம. இபபோதிருக்கும் மஹந்துவின் பெயா பகவன்தாசு இவருக்கு வயது சுமார 35 இருககலாம். இவர் உதாரகுணமுள்ளவராதலால் கோயில் வருமானத்தி லிருந்து திருப்பதி மலையின் மேல் நல்ல ஜலங்கொண்டுவருவதற்கு பொருளுதவி செய்ததன்றியில், மலையினமேல் சத்திரங்கட்ட 25,000 ரூபாயும், கீழ் திருப்பதியில் ஒரு தருமஆசுபத்திரியைக்கட்ட 14,708 ரூபாயும், சென்ற 23 வருஷகாலத்திற்குள்ளாக மலையின மேலிருக்கும் ஆயிரங்கால் மண்டபத்தை ரிபேர்செய்யவும்,அல்பிரி ரோட்டையும், நரசிம்மதீர்த்தத்தையும் ரிபேர்செய்யவும், இன்னும் சில்லரை மராமத்துகளுக்காக 1,30,846 ரூபாய் செலவிட்டதன்றியில், திருப்பதி மலையின்மேல் தங்க துவஜஸதமபததையும், புதுப்பிக்க பிரயத்தனப்பட்டிருக்கிறார். இந்தமஹந்துக்கள், க்ஷத்திரிய இரஜபுத்திரா மராட்டியர், லம்பாடிகளுக்கு குருவாயிருப்பதனறியில் கோயில் வருமானம்செலவு முதலானதுகளுககெல்லாம் இவரே பிரதானமாகவிருக்கிறார். 1843 ௵ இந்தக்கோயில் காரியங்களை இங்கிலீஷ கவர்ன்மெண்டாரேநேராக வகிததுக்கொண்டு காரியங்களை நடாத்தப் பிரயத்தனப்படுகையில் அநேகருக்குச் சங்கடமுண்டாகி மறுபடியும் மஹந்துவின் வசத்திலேயே விட்டுவிட்டார்கள்.

## கோயில் சிப்பந்திகள் வரவு, செலவு.

இப்போது இந்தக் கோயில்காரியங்களை நடத்த இரண்டு ஜீயங்காரரும்,ஏகாங்கிகள் நால்வரும் மஹந்தவர்களால் நியமிக்கபபட்டிருக்கிறார்கள். இந்தஜீயஙகாரர்கள் சம்சாரிகளாகவும,ஏகாஙகிகளபிராம்மண பிரம்மச்சாரிகளாகவும்,அல்லதுதாரமிழந்தவர்களாகவுமிருக்கிறார்கள். இவர்களுக்குக் கீழ் பார்பத்தியதார், பாரவாத்தகாரென்ற உத்தியோகஸதாகளுண்டு. இவர்கள் பிரதிதினமும் கோயிலுங்குவந்து முன்மண்டபத்தின்

இடதுபக்கமாக அனுருடங்கட்டும பெரியஉண்டிகைப்பையில்காலேமுதல் மத்தியானம் 2 மணிவரையிலும,பிறகுஇராததிரி 9 மணிவரையிலும,விழும், பணம, பொன,வெள்ளி, நகைமுதலானதுகளை யெடுதது மதிபபிட்டுக் கணக்கெழுதிமஹநதவர்களுடைய சர்க்காருக்கு அனுப்புகிருர்கள். அவ்விடத்திலுள்ளவர்கள் அவைகளை ஜடிதிபார்த்து சுவாமிககு வேண்டிய நகைமுதலானதுகளை வைததுககொண்டு, மற்றவைகளை வாரத்துககு ஒருதரம ஏலத்தில் விற்று வந்தபொருளை சுவாமி பொக்கிஷத்திற் சேர்ப்பார்கள். 1820ஷும் 1,0,2000 ரூபாய் உண்டியில் வந்தது ஷை ஷு பிரமோற்சவத்தில் மாத்திரம் 87,000 ரூபாய் உண்டியில் வந்தது. 1822 ஷும 14,200 ரூ வருமானமும, 20,000 ரூ செலவுமாக விருந்தது. 1869 முதல் 1875 வரையில் சராசரி 2,11,726 ரூபாய் வருமானமும், 1,46,906 ரூ செலவுமாக விருநதது. பைராகிகள போஜனநதுக்காக 64,820 ரூபாய் செலவாச்சுதாம். இநதககோயிலின உண்மையான வரவு செலவின விவரம் தெரிவது கஷ்டசாத்தியமாக விருக்கிறது இந்தமலேயானது மஹா பரிசுத்த ஸ்தலமென்றும், இந்துககள்தவிர இதரஜாதியார் மலேமேற்போகக் கூடாதென்ற கட்டுபாடு மிருககிறபடியால் மலேயின விவரத்தையும வரவு செலவு விவரத்தையும் சரியாக அறிந்துச்சொலலக் கூடவில்லை அநேக வருஷங்களுககு முனபு அப்பிடெப்பியாஸ (Abbi Dubois)எனற ஐரோப்பிய ரோமன்மதகுருவானவர் பிராமமண வேடம்பூண்டு மலேயின்மேல் போனதாக ஆசியாடிககு ஜர்னலில் கண்டிருந்தபோதிலும 1871-ஷு வரையில ஒரு இங்கிலீஷகாரனுகிலும் போனதில்லேயென்று சொல்லுகிறாகள். அந்த1871ஷு மலேயின்பேரில் ஒரு கொலே குற்றம் நடந்தபடியால் இங்கிலீஷகாரர் மேலே போனதாகவும, அப்படிபபோனது பிசகெனறு மஹந்தவர்கள சென்னை கவர்னருககும், கவர்னர் ஜனராலுக்கும், இந்திய சிகிரிடெரிக்கும் தந்திசமாசார மனுப்பிஞராம் பிறகு தாளாவட்டததில் 12-யூரோபபியர்கள்வரையில் போய்வந்ததாகச் சொல்லுகிருர்கள். இப்போது மலேயினபேரில் பொக்கிஷாதிபதி, உக்கிராணக்காரர், புனுககாரன, மாலேகட்டி, சந்தனமரைப்போன், விரகுவெட்டுவோன, மூனறு சேவகர். ஒருகுயவன், ஒரு மசால்ச்சி, முதலான சிப்பந்திகளிருக்கிருர்கள. இந்தக்கோயில் மகாபரிசுத்த ஸதலமாகையால் தாசிகள் கிடையா. ஒரு புராணத்தினபடி இந்தககோயிலின் சக்தி 5000-வருஷங்கள் தானிருக்குமென்று சொல்லுகிறபடியால, இன்னும் 20-வருஷமானுல் அந்த 5000-ஷு முடிவுபெறுமாம். ஆனதுபற்றியே இப்போது கோயில் வருமானமும் குறைந்துக் கொண்டு வருவதாகச் சொல்லுகிருர்கள்.

## சுவாமியை சேவிக்கும்விதமும், சேவைகளின் விவாமும்.

முதலில இத்திருப்பதிககு சுமார் ஒருமைல் தூரத்திலிருக்கும் ஆழ்வார் திர்த்தததுககுபபோய் ஸநானஞ்செய்து சங்கலப்பஞ் செய்துக் கொள்ளவேண்டியது. இதற்குச் சுமார் 45-அல்லது 50-கெஜ உயரமான

காட்டிலிருந்து விழுகிற ஜலத்தை அழகிய படிக்கட்டுகளால் கட்டி தடுக்கப்பட்டதீர்த்தம். இதற்கு கபில தீர்த்தமென்றுஞ் சொல்லப்படும். இந்தத்தீர்த்தத்துக்குச் சமீபத்தில் இரண்டு மூன்று தீர்த்தங்களிருக்கின்றன. அவைகளிலும ஜலமெடுத்துத் துளித்துக்கொண்டுஞ் சமீபத்திலிருக்கும் உடையவர் சன்னிதிககுப்போய் சேவித்துக்கொண்டுங் கோவிந் தா! கோவிந் தா! வெங்கடரமண கோவிந் தா! வென்று கோஷித்துக்கொண்டும் மலையையேறவேண்டும்; அடிவாரத்திலிருந்து காலி கோபுரம் வரையில் சற்றேரககுறை ஒருமைல்தூரம மலையானதுநெட்டுகுத்தலாக விருப்பதால், வெகுகஷ்டத்துடன் ஏறவேண்டும. அநதகாலிகோபுரமானது இபபோதுரொம்பவும்கிலமாகி அபாயஸ்திதியிலிருக்கிறது அதற்கப்புரம் மற்ற இரண்டு கோபுரங்கள்வரையில் வழியானது கூடியவரையில் சமதரைப் பாங்காகவிருக்கிறது. பிறகு முழங்கால் முறிச்சி எனனுமிடத்தில் அதிக கஷ்டத்துடன ஏறியிறங்கவேண்டும். பிறகு வழியானது கூடியவரையில் சமதரைப் பாங்காக இருக்கிறது. வழிமுழுவதும் பற்பலவிதபுஷபச்செடிகளாலும், மரங்களாலும், நிறைந்துபிரகாசிப்பதால் பிராயாணிகளுக்கு நேர்த்தியான காக்ஷிகளிருக்கின்றன. இடைக்கிடை தண்ணீர்பந்தல்களும், தஙகும் மடங்களும் உண்டு. இவ்விதமாக வரப்பட்ட பக்திமான்கள், கோயில் தரிசனையையும், துவஜஸதம்பத்தையுங் கண்ட உடனே, வெங்கடரமணகோவிந் தா! கோவிந் தா! வெனறு விழுந்து தண்டம் சமர்ப்பித்துக்கொண்டு, சமீபத்திலிருக்கும் சுவாமி புஷ்கரணி தீர்த்தத்தில் ஸநானஞ்செய்து சங்கல்பத்தை முடித்துக்கொள்வார்கள். அநேக சூத்திரர்களும், சில பிராமணர்களும் சிரோபாரம் நீக்குதலேயாகிய தலைமயிரை எடுத்துக்கொள்ளுவார்கள், இதற்கு 2-அணு முதல் 8-அணு வரையில் கூலி ஏற்பட்டிருக்கிறது. இந்த வேண்டுகோளை நிறைவேற்றுவிட்டால், மற்றெவ்விதமாகவாவது தலைமயிர்போய்விடுமாம். இப்படி மொட்டை யடித்துக்கொண்ட பிறகு சுவாமி புஷ்கரணி தீர்த்தத்தடாகத்தில் ஸநானஞ்செய்து சங்கல்பஞ்செய்வாாகள். இந்த தடாகமானது நூறு கெஜநீளமும், ஐம்பதுகெஜ அகலமுமுள்ளது, இதற்குள் 9-சிறு தீர்த்தங்களிருக்கின்றவென்பது நிகழ்ந்த பஞ்சகாலத்தில் நீா வற்றிப்போனபோது காணப்பட்டன. இந்த சுவாமி புஷகரணியில் வருஷத்திற்கு ஒருதடவை சகல தீர்த்தங்களும் வந்து சேர்வதாக ஐதிகமிருக்கிறபடியால், அழுக்கான ஜலமென்று அசட்டை செய்யாமல், அனைவரும் ஸநானஞ்செய்து வருகிறுர்கள். இதற்குச் சமீபமாக வராஹதீர்த்தமும், வராஹசுவாமியும் இருக்கிறது. பூாவம் இந்த மலைக்குச் சொந்தமானவர் வராஹசுவாமியான படியால், முதலில் இந்த சுவாமியை தரிசித்துக் கொண்டுதான், பெரியகோயிலுக்குப் போகவேண்டும. சிலபக்திமான்கள் கோதுமைமா, கற்கண்டு, எழுமிச்சம் பழங்களுடன இரண்டு ரூபாய் காணிக்கையாகவைத்து மஹாந்தவர்களைப்போய் தரிசிபபதுண்டு. அப்படி தரிசித்தால் அவர் ஓர் சேவகனைகூடஅனுப்பி வேங்கடரமண சுவாமி

தரிசனைக்கு சிபார்சு செய்கிறார். உடனே கோயிலுக்குப்போனால், அவ்விடம் கர்ப்பக்கிரஹமண்டபத்தின் வெளியில் கட்டியிருக்கப்பட்ட இரண்டு மணிகளில் ஒன்று கோவிந்தா! கோவிந்தா! என்றும்; ஒன்று நாராயணா! நாராயணா! என்றும் ஓசையுண்டாகும்படி அடிக்கிறார்கள். அப்போது சம்பத்துக்குத் தக்கபடியாகவும், சிபார்சுக்குத்தக்கபடியாகவும் சேவை கிடைக்கிறது. மேலும் யாராவது கற்பூர தீபாராதனைச் செய்விக்கவேண்டுமாகில், ஒரு ரூபாய் கொடுக்கவேண்டும். சுவாமி தரிசனை ஆலவட்டம், தீர்த்தம், சடகோபுரம் முதலானதுகள் இலவசமாகக் கிடைக்கும்.

## உற்சவ விவரங்கள்.

இந்த வெங்கடரமணசுவாமிக்கு அபிஷேகம், நைவேத்தியம், வாஹனம் முதலானதுகளால் ஆர்ஜிதவரத்தனைகள் பலஉண்டு. பிரதிதினம் காலை ஏழுமணிக்கு சாக்கரை வெண்ணை முதலானதுகளை வைத்து வணங்கிவருகிறார்கள். பிரம்மோற்சவகாலங்களில் விசேஷமான ஜனங்கள்வருவதால், அக்காலங்களில் யாராவது பக்தர் சுவாமிக்கு சர்க்கரைப்பொங்கல், புளியோரை, ததியாராதனம், மனோஹரம் முதலானதுகளைச் செய்வித்து வணங்குவோர் 6-ரூபாய் கொடுக்கவேண்டும்: கங்காளதளிகைசெய்விக்க 6-ரூபாய் கொடுக்கவேண்டும்; பக்ஷணம்செய்வித்து படைக்கவேண்டுமானால், 28-ரூபாய் கொடுக்கவேண்டும்; உலகப்படிக்கு 4 - ரூபாய் கொடுக்கவேண்டும்; அமுந்தாரண உற்சவஞ்செய்விக்க 65-ரூபாய் தரவேண்டும். வெள்ளிக்கிழமை புளக அபிஷேகம் செய்விக்க 50 - ரூபாய் கொடுக்கவேண்டும்; வியாழக்கிழமைதினம் பூவலங்கி சேவையை செய்வித்தால் 60-ரூபாய் கொடுக்கவேண்டும், தோமாலை சேவைக்கு 12-ரூபாய் கொடுக்கவேண்டும், சஹஸ்ரநாமஞ் செய்விக்க ஐந்துரூபாய் தரவேண்டும்; பள்ளியறை மஞ்சபசேவைக்கு 12-ரூபாய் தரவேண்டும். இத்தியாதி உற்சவங்களுக்கும், வைபவங்களுக்கும், சாதாரணகாலத்தில், விலை சரசமாகவிருக்கிறது. திரும்பிவருமபோது ஸ்தானிகாள் முதலான சில்லரை சிப்பந்திகளுக்கு இரண்டுரூபாய் முதல் இரண்டணாவரையில் மரியாதை செய்யவேண்டியதன்றியில், வழிமுழுதும் நிறைந்துமோய்க்கும் பிச்சைக்காரர்களுக்காக, சில்லரை தம்பிடிகளை போட்டுக்கொண்டுவரவேண்டும்.

## வாகனங்கள்.

இந்தக்கோயிலுக்கு கற்பகவிருக்ஷம், பல்லக்கி, சேஷவாஹனம், சிரோபூபவிமானம், சூரியபிரபை, சந்திரபிரபை, அர்த்தனஅரை, அந்தூல் பல்லக்கி, சிங்கவாகனம், பாலசேஷவாஹனம், கருடாள்வார், அநுமந்தர், என்ற 12-கிலிட்டுவாகனங்களிருக்கின்றன. இவைகளுக்கு ஏற்பட்டிருக்கும் கிரயத்தைக்கொடுத்து உற்சவத்தை நடத்திவைக்கலாம். இப்படி நித்திய நைமித்திக உற்சவங்களை நடப்பித்துவைக்கும் பக்திமான்களுக்கு கோயிலில்மரியாதைசெய்து அனுப்புவதுமுண்டு, எவராவது

100-ரூபாய்செலவுசெய்து சேவித்தால் அவர்களுக்கு பரிவட்டம், துளசி மாலை, அலங்காரமரியாதைகளும்; நூறுரூபாய்முதல் 500ரூபாய்வரையில் செலவுசெய்பவருக்குப்பட்டுபுஷ்பமோடுதுளுவமரியாதைகளும்,1000-ரூபாயிக்கு அதிகமாக செலவுசெய்பவருக்கு ஒரு சால்வை மரியாதையையும் செய்வதுண்டு. சாதாரண காணிக்கையையும், இரண்டுரூபாய் தக்ஷிணை கொடுத்து மஹந்தவர்களை தரிசிப்பவர்களுக்கு ஒரு துளசிமணிமாலையும ஒருபணியாரமும், கொஞசம ஸ்ரீபாதரேணு என்ற சுகந்தபரிமளங்கள டங்கிய பச்ச கற்பூரமும், கொஞ்சம் தீர்த்தமும், மரியாதையாககொடுப்பார்கள். இந்தக்கோயிலுக்குள் உடையவர்முதலான சில்லரை சிறு கோயில்களிருக்கிற தன்றியில், வெளிபிரகாரத்தின் உள்வாசலுக்கு இரு பக்கங்களிலும் தொண்டமன சக்கிரவர்த்தி, இராயர், அபபாஜிகளைப்போன்ற கற்சிலைகள் செய்துவைக்கப்பட்டிருககினறன. இந்தக்கோயிலில் நடக்கும் நித்திய நைமத்திகக்கைங்கரியங்கள் வைகானச ஆகமத்தை யனுசரித்து செய்யப்பட்டு வருகினறது.

கோயிலுக்குவெளியில் ஒருமேட்டின்மேல் மஹந்தவர்களுடைய மடம்கட்டப்பட்டிருக்கிறது. இவ்விடம் மஹந்தவர்கள் வாசம்செய்ய யோக்கியமான கட்டடங்களும், சுவாமியின பொக்கிஷசாலையும், கோடி சாவி கிராமகோவிலும், பைராகிகள் தங்குமிடமும, அனனசாலையும பூர்வ மஹந்துக்களுடைய சமாதிகளுமிருக்கினறன. இவ்விடமிருக்கும அன்னசத்திரத்தில் சகலரும் தாராளமாகவந்து சாப்பிடடுபபோகலாம. ஜாதிபேதமில்லை. இந்த மஹநது மடத்துக்குச் சமீபத்திலும, கோயில்சன்னிதி வீதிக்கு இருபக்கங்களிலும் ஆயிரக்கால்மண்டபம, வேறுசில்லரை கட்டிடங்களும், மைசூர்ராஜா, கொச்சி காளாஸதிரி, வெங்கடகிரி ராஜாக்களால் கட்டிவைக்கப்பட்ட சத்திரங்களுமிருக்கின்றன. அருகில் கடைகளுமிருக்கினறபடியால், பிரயாணிகளுககு வேண்டிய சகலபதார்த்தங்களும் நயமான விலைக்குஅகப்படும்.

இந்தமலைக்கு வருபவர்களில் பெரும்பான்மையோர் காலமறிந்து போதுமான போஜனத்தைச் சாப்பிடாமல பட்டினியாக விருப்பதாலும், அழுக்கு ஜோனை ஜலத்தை சாப்பிடுவதினாலும், விசேஷமாக மலையின் மேல்விஷகாற்று வீசுவதினாலும், காய்ச்சல்முதலான வியாதிகள் கண்டு வயிற்றுவீக்கத்தோடு இறநதுபோகச் சமபவிக்கிறது. சுமார் பத்துவருஷங்களுக்குமுன் இருந்தபிரஜைகளைக்கூட இப்போது பார்ப்பது அபூர்வமாகவிருக்கிறது. இந்தமலையின்மேல் சிததிரை வைகாசி மாதங்களில் நாக மரம்பூத்தும், அரசமரங் கொழுந்துவிடுகையில், மலையின்பேரில் மூன்றுநாளைக்குமேலிருந்தால் எப்படிப்பட்டவர்களுக்கும் காய்ச்சல்வராமல் போவதில்லை. இப்படிப்பட்ட மலையினமேல் பெரும்பாலும் பக்திமான்களே விசேஷமாக வருவதனால் அவர்கள் விஷக்காற்றுக்கு பயப்படுகிறதில்லை.

செப்டெம்பர் அல்லது அக்டோபர் மாதத்தில் ஆஸ்வீஜ சுத்ததில் ஸ்ரீபத்மாவதி திருக்கலியாணமும்,பிரமோற்சவமும் பத்துநாள் கொண்

டாடப்படுகிறது. அப்போது 3ம் 5ம் 7ம் திருநாளில் விசேஷமானஜனங்கள்வந்து கூடுகிறார்கள். 9-ம் திருநாளில் இரத உற்சவம நடக்கிறது, 11-ம திருநாளாகிய தசாராநவமியில் கருடஉற்சவம் நடக்கிறது. அக்காலங்களில் விசேஷகும்பகள கூடுவதனறியில், சப்திமி, முககோடி, சிவராத்திரி, முதலானதினங்களில் விசேஷஉற்சவங்கள் நடந்துவருகின்றன. இந்தமலையின மேல் மூனறரைகோடி தீரத்தங்களிருப்பதாக புராணங்களில் சொல்லப்பட்டிருந்தாலும இபபோ காணபபட்டவைகள் முப்பது தான. இவைகளில் விசேஷமானவை, சுவாமி புஷகரணி அல்லதுகோனேரி தீர்த்தம. இரணடாவது பாப விநாச தீர்த்தம், இது சுவாமியின சனனிதிக்கு மூனறுமைல் தூரத்திலிருககிறது. இதில்போய் நின்று ஸநானஞ் செயபவர்களினமேல் விழும்ஜலம வெள்ளையாக விருந்தால் புணியவான்களெனறும, கருப்பாகவிருந்தால் பாவிகளென்றுஞ் சொல்லுகிறார்கள். மூன்றாவது கோகர்ப தீர்த்தம், இது முன் கொயிலுக்குச்சமீபததிலிருந்ததாம், இப்போது கோயிலுக்கு கிழக்கே கால்மைல் தூரததிலிருக்கிறது. இது ஒருஜானை நீர், குறுக்கேப்போட்டிருக்கும மரக்கட்டையைப் பிடித்துக்கொண்டு முழுகி அந்தர கரணம்போட்டு வரவேண்டும். இதற்குச்சமீபத்தில் க்ஷேத்திரபாலதண்டு எனனும ஒருபெரிய குன்றிருக்கிறது. இவ்விடம் தருமராஜர் விககிரகமிருக்கிறபடியால், வியவஹாரவிஷயமாக சத்தியஞ் செய்பவரெல்லாம வந்து ஏழுரூபாய் கொடுதது பிரமாணஞ் செய்கிறார்கள். இவவிடமபூர்வம் பஞ்சபாண்டவர் தமது ஆயுதங்களைக் கழுவத் தங்கியபடியால், ஒரு காட்டின் அடியில் ஒரு பஞ்சபாண்டவா சன்னிதியும் அருகில் ஒரு குகையும் இருக்கிறது. இந்தக் குகையில் புகுந்து போனால் ஏழுமைல் தூரத்திலிருக்கும் செந்தரகிரிகோட்டையில்கொண்டுபோய் விடுவதாகச்சொல்கிறார்கள். இவ்விடத்தில்தான் ஸ்ரீமான் பராங்குசதாசர் சிலகால மிருந்ததாக பிரஸதாபம், இதில் ஐந்து கெஜம் தூரம் வரையில் நாம் நுழைந்து பார்த்தோம். இருட்டினால் வழிதெரியாமல் திரும்பிவந்துவிட்டோம். இந்தக்குகைக்குச்சமீபத்தில் கந்தமூலத்தின் காக்ஷி ஆனந்தமாகவிருக்கிறது. பிரார்த்தனைக்கும் ஈஸ்வர தியானத்துக்கும் சிறந்தவிடம். இதற்குச்சமீபத்தில் இரண்டுஸதிரீகள் உலகா ஆடம்பரங்களை விட்டொழித்துவந்து காய்கிழங்குகளை தின்று ஈஸ்வரதியானத்தினால் காலம்போக்கி வருகிறார்கள்.

தும்புருகோண தீர்த்தம். இதுசுவாமியின் சன்னிதிக்கு கிழக்கே 4 மைல் தூரத்திலிருக்கிறது. இந்த தீர்த்தம் சுமார் கால் மைல் உயரமுள்ள கானக்குன்றத்திலிருந்து விழுகின்றது. இவ்விடத்திய கந்தமூலாதிகளின் காக்ஷி வெகுவிநோதமானது, இவ்விடமும் மஹாரிஷிகள் வாசாயோக்கியமான சில குகைகளிருக்கின்றன. இராத்திரிகாலங்களில் புலிகள், காட்டெருமைகள் சிருத்தைகள்முதலான மிருகங்களின் சஞ்சாரமுமுண்டு. ஏகாந்தமாகபகவத்தியானத்தைச்செய்வதற்கு இது சிறந்தவிடமாகவிருக்கிறது. இந்தத் திருமலைக்குப்பின்பக்கம் ஏழுமைல் தூரத்தில் சந்திரகிரிகோட்டையிருக்கிறது

இது இப்போது தாலூகா சப்டிவிஜன். இந்தவிடததில்தான் வேடிக்கை வரப்பிரசாதியாகிய **தேன்னலுராமன்** ஜனிததது, இப்போதும் அவர் சந்ததிகளிருககிறார்கள். மேலும் இவ்விடமிருந்த வித்துவான்களால் மநுசரிததிரம், வசுசரித்திரம், பாண்டவ விஜயம், முதலான கிரந்தங்களியற்றப்பட்டன. இந்தக்கோட்டையை இம்மிடிநரசிங்க யாதவராயரால் சாலிவாகனசகாப்தம் 922ளும் அல்லது கி. பி. 1000ளு கட்டப்பட்டது. பிறகு விஜயநாதரும், வெங்கடபதி நாயடவர்களும் கோட்டையைக் கைககொண்டு திருப்பதிமலையின்பேரில் ஒரு அரண்மனையைககட்டினார்கள். இவாகள் காலததிலதான் சைவா சன்னிதியாகவிருந்த, திருமலையானது வைணவர் சந்நிதியாகிய தென்று சிலசரித்திரககாரர் அபிப்பிராயப் படுகிறார்கள் ஆனல் திருப்பதிககுப்போகும் பக்தாகள், எழுமைல் தூரததிலிருக்கும் இந்த சந்திரிகிரிகோட்டைககுப் போகாமல் திரும்பி கீழ்த்திருப்பதியாகிய கோவிந்தராஜ பட்டணத்துககே வந்து விடுகிறார்கள். இதற்குககாரணம், மலையின்பேரில் அமமன்சன்னிதி யில்லாமையால், கீழ்ததிருப்பதிக்கு மூன்றுமைல் தூரததிலிருக்கும் அலமேலு மங்காபுர மென்னும் திருச்சாநூருக்குப்போய் அம்மனைச்சேவிதது ஆனந்தமடைவதற்காகவே.

## திருச்சாநூர், அலமேலு மங்காபுரம்.

திருப்பதிமலையைச் சேவித்துக்கொண்டு கீழ்த்திருப்பதிக்குவந்து கோவிந்தராஜர், இராமசுவாமி கோயில்களை சேவிததுககொண்டுகடைவீதியிற்போய் மரப்பாச்சி பொம்மைகளையும, வேணடிய பாத்திரங்களையும், சந்தன கற்களையும், மூங்கி ல்தடிகளையும், வாங்கிக கொண்டு மறுநாள்திருசசாநூாரொனனும் அலமேலு மங்கை புரததுக்குவருகிறார்கள். அந்ததிருச்சாநூர் ஒருசிறிய கிராமம். 1871ளும் 2261 ஜனங்களிருந்தார்கள் இபபோது ஐந்துபெரிய வீதிகளும், 350 வாசாயோக்கியமான வீடுகளும், ம-ா-ா-ஸ்ரீ வீராசாமிசெட்டியாரவாகளுடையவும், பேஷ்காரவர்களுடையவும் சிறந்த சத்திரங்களும் இருக்கின்றன. சகலவித காய்கறி பதார்த்தங்கள் நயமான விலைக்கு அகப்படுகின்றன. ஒருகாலத்தில் மகாலக்ஷிமியானவர், விஷணுவுடன் மனஸ்தாபஞ்செய்துக்கொண்டு இவ்விடம் வந்துவிட்டாராம். அதன்மேல்மஹாவிஷ்ணுவானவர்அம்மையாரைத தேடிககொண்டு வருகிறபோது நாராயணவனதது ஆகாசராஜன் குமாத்தியாகிய பத்மாவதியைக் கண்டு மோகித்து கலியாணஞ் செய்துக்கொண்டார். ஆயினும் இந்த இலக்ஷிமிதேவியின்பேரிலிருந்த பிரயமாத்திரம் நீங்காமையால் தனது சக்கிரததைவிட்டு அவ்விடமோர் தடாகததையுண்டாககி அந்தத தடாகத்தில் ஜனித்து தாமரைமலரில் இலக்ஷிமிதேவியை தோன்றும்படிசெய்து அந்தததீர்த்தக்கரையில் பனிரண்டு வருஷ காலமாக அன்ன ஆகாரமின்றி தபசுசெய்தாராம். அப்படிச்செய்தும் அந்த இலக்ஷிமிதேவியானவர் விஷணுவுடன் திருப்பதிக்குப்போக பிரியமில்லாமல், இவ்விடத்திலேயே தங்கிவிட்டாராம். ஆகவே இந்தஇடம் மகா சிரேஷ

டமான இடமாகவும், இந்ததீாததம் மகாசிரேஷடமான தீர்த்தமாகவும், கொண்டாடப்படுவெருகிறது. இந்தத தீாத்தமானது சுவர்ணமுகி நதியின் வடகரையில் தோன்றுகிற சிறந்தபெரியதடாகம. இதமகு ஒருபக்கத்தில நதியின்ஜலம்வந்து சேருகிறதன்றியில், வேறொருபக்கததில அழுக்குஜலம்போக வழிவிடப்பட்டிருககிறது. இந்த தீர்த்ததுககுச்சமீபத்தில் அலமேலுமங்கை யாருடைய சிறநத புராதன கோயிலிருககிறது. இநதககோயிலில் குங்குமதீபாராதனை செய்யவிருமபுவோர் அரை ரூபாய் கொடுககவேண்டும் கோயில் சிப்பந்திசெலவு மாதம் ஒன்றுக்கு நூறுரூபாய் யாகிறது. நிததியபடி 20–சேர் அரிசி தளிகைசெய்கிறார்கள். வருஷத்தில் பதது உற்சவஙகள் நடக்கினறன. தெப்பல் உற்சவம் பலவிததஇிலும் சிறந்தது. தெப்பக்குளத்தை இப்போது ரிபேர் செய்துவருகிறார்கள். மேலும், இந்த அலமேலுமங்கபுரமென்னும் திருச்சானூரில் பூர்வம் சுகப்பிரம்மரிஷியானவர் இத் தீர்த்தகரையில்வந்து தபசுசெய்தமையால், திருசுகநூர் என்ற பெயர்வழங்கிவந்து இப்போது திருச்சானூரென்று பெயராகிவிட்டது.

இது மஹாதிவ்வியஸ்தலமாகையால நமது தக்ஷணதேசததிலிருக்கும் மத்துவமதஸ்தர்கள் கூடி நிகழ்ந்த பஹுதானியவருஷம் [1877–78]மத்துவசித்தாந்த உன்னஹனிசபையை ஸ்தாபித்திருககிறார்கள். இந்தசபையின் நோக்கம் நமதுதேசததில் சமஸ்கிருதவித்தையை பரிபாலனஞ்செய்து,வைதீகவிஷயங்களை விருத்தியாக்கவேணடுமெனபதே. இதுபொதுவிஷயமானசபையாகவிருந்தபோதிலும், பெரும்பாலும் மததுவசிததாந்திகள் மாத்திரம் சேர்ந்திருக்கிறாகள்.இந்தச்சபைக்குத்தலைவர் மகா-ா-ஸ்ரீ கஞ்சி சுப்புராயரவர்கள். இவருடை முயற்சியினால் தருர்மாாததமாக நாலாபக்கங்களிலிருக்கும் மாத்துவசித்தாந்த சமஸ்கிருதபண்டிதாகளை வருஷாந்திரத்தில் தருவித்து. சுருதி,ஸ்மிருதி, இதிகாச, புராண, தருககமீமாம்ஸ, வியாகரணாதிகளில் பரிக்ஷைசெய்து தேறினவர்களுக்கு திரவியம்,சால்வை முதலான பகுமானங்களைச்செய்து வருகிறார்கள். இநத பெரியகாரியத்துககாக அநேக தருமவான்கள் திரவியசகாயஞ் செய்கிறார்கள் வருஷாந்திரததில லவுகீக வைதீக பிராம்மணர்கள் ஏராளமாக வந்து தத்காலம்மகா-ா-ா-ஸ்ரீ வீராசாமி செட்டியாரவர்கள் சத்திரத்தில்கூடி பிரசங்கம் முதலானதுகளைச் செய்வதால், தங்களுக்கென்று பெரிய பிரசங்க மண்டபங்கட்ட கோயிலுக்கு பின்புரத்தில் ஒரு இடததை தயார்செய்திருக்கிறார்கள். இக்கட்டிடத்திற்கு மதிப்பிட்டிருக்குந்தொகை 12,000ரூபாய். இதில் இப்போது 400 ரூபாய் சாமான்களுககாக அட்வான்சு செய்திருக்கிறார்கள். இந்தச்சபைக்கு மகா-ா-ா-ஸ்ரீ தொண்டோராவ்ஜி, நரஹரிராவ்ஜி. ஹனுமந்தராவுஜீ, ரிஜிஸ்டர்களாகவும், ம-ா-ா-ஸ்ரீ நாராயணராவ்ஜி, ஸ்ரீநிவாசராவுஜீ,காஷியர்களாகவும், மகா-ா-ா-ஸ்ரீ. இராஜராவு, இராமராவு, கிருஷ்ணராவவர்கள் உத்தியோகஸ்தர்களாகவும், மகா-ா-ா-ஸ்ரீஅநுமந்தராவுஜி, ஸ்டோர்கீபராகவும், மகா-ா-ா-ஸ்ரீ அன்னயாசாரியார் சப்ளை செய்பவாாகவும், மகா-ா-ா. சுவாமிராவுஜீக்கள், வைதீக சடங்குகளை நடத்தவும் மகா-ா-ாஸ்ரீ காஞ்சி

சுப்புராயரவர்களை காரியதரிசியாகவும் 1883ளும் நியமிக்கப்பட்டார்கள் ஆரணி ஜாகிர்தாரவர்கள் தம்மிடமிருந்த ஸமஸ்கிருத கிரந்தங்களை யனுப்பி வைத்தார். அநேகர் அரிசி பருப்பு முதலான பதார்த்தங்களைக் கொடுத்து உதவிசெய்தார்கள். நிகழ்ந்த சித்திரபானுவருஷத்தில் இந்த சபைக்கு பல விடங்களிலிருந்துவந்தரூபாய் 7142-3-2 வருமானமும். ரூபா 4970-13-2 செலவுமாகவிருந்தது. இந்த வருமானத்தை விருத்தியாகும் பொருட்டு இந்தச்சபையார் ஒரு திரவிய சேகரநிதியை ஸ்தாபித்திருக்கிறார்கள். அதில் ரூபாய் 17,244-5-10 சேர்ந்திருக்கிறது. இத்தியாதிகளுக்கெல்லாம், இந்தத்திருப்பதி, மலையானது காரணமாகவிருப்பதால் இக்காலத்தாரன்றி முன் காலத்தாருங் கொண்டாடினார்க ளென்பதற்கு திருஷ்டாந்தமாக, திராவிடவேதமாகிய நாலாயிரப்பிரபந்தத்தில், ஆலிநாடான எனப்பட்டப் பெயர்பெற்ற திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய பெரியதிருமொழியில், இந்தத் திருபபதியாகிய திருவேங்கட ஸ்தலத்தைச் சுட்டிய பாடிய (பிரபந்த-தி விருந்து) நாலு கவிகளை இங்ஙனம் போத்தெழுதுகிறோம்.

தரியேதந்தை தெரியேன் பாலகனாய்ப் பலதீமைகள் செய்துவிட்டேனா,
பெரியே னாயினபின் பிறர்க்கே யுழைத் தேழையானேன்,
கரிசேர் பூமபொழில் சூழ்கனமாமலை வேங்கடவா,
அரியே வந்தடைந்தே னடியேனையாட் கொண்டருளே.

நோற்றேன் பலபிறவி யுன்னைக் காண்பதோ ராசையினால்,
ஏற்றே னிப்பிறப்பே யிடருற்றனை னெம்பெருமான்,
கோற்றேன் பாய்ந்தொழுகுங் குளிர்சோலைசூழ் வேங்கடவா,
ஆறறேன் வந்தடைந்தே னடியேனை யாட்கொண்டருளே.

பற்றே லொனறுமிலேன் பவமேசெய்து பாவியானேன்,
மற்றே லொன்றறியேன் மாயனே யெங்கள் மாதவனே,
கற்றேன்பாய்ந் தொழுகுங் கமலச்சுனை வேங்கடவா,
அற்றேன் வந்தடைந்தே னடியேனையாட் கொண்டருளே.

கண்ணா யேழுலகுக் குயிராய் வெங்கார்வண்ணனை,
விண்ணோர் தாம்பரவும் பொழில் வேங்கட வேதியனைத்,
திண்ணார் மாடங்கள் சூழ்திருமங்கையர் கோனகலியன்,
பண்ணார் பாடல்பத்தும் பயில்வார்க்கில்லை பாவங்களே.

நாலாயிரப் பிரபந்தம் சோநாடான் என்னப்பட்டப் பெயர் பெற்ம
-ராழ்வார் திருவாய் மலர்ந்தருளிய பெருமாள் திருமொழியில்.

## திருவேங்கடமுடையான் விஷயம்.

2 - வது, 5 - வது, 7 - வது, 9 - வது கவிகள

ஆனாத செல்வத் தரம் பையர்கள் தற்சூழ,
வானாளுஞ் செல்வமு மண்ணரசும் யானவேண்டேன,
தேனார் பூஞ்சோலைத திருவேங்கடச் சுனையில்,
மீனாயப் பிறக்கும் விதியுடைய னாவேனே.

கம்பமத யானைக் கழுத்தகத்தின் மே லிருந்து,
இன்பமருஞ் செல்வமு மிவ்வரசும் யான்வேண்டேன்,
எம்பெருமா னீச னெழில்வேங் கடமலைமேல்,
தம்பமாய் நிற்குந் தவமுடையே னாவேனே.

வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மனனவர்தம்,
கோனாகி வீற்றிருந்து கொண்டாடுஞ் செலவறியேன,
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கட மலைமேல்,
கானாறாய்ப் பாயுங் கருத்துடையே னாவேனே.

செடியாய் வல்வினைகள் தீர்க்குந் திருமாலே,
நெடியோனே வேங்கடவா நின்கோயில் வாசல்,
அடியாரும் வானவரு மரம்பையருங் கடந்தியங்கும்,
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே.

என்று பின்னும் பலர் பலவிதமாகப் பாடி, பாராட்டி வந்திருக்கிறார்கள். நூற்றெட்டு வைணவ திவ்யதேசங்களிற் சிறந்த பஞ்ச திவ்ய தேசங்களாகிய, ஸ்ரீபெரும்பூதூர், காஞ்சிபுரம், திருவரங்கம் பெரிய கோயில், திருநாராயணபுரம் முதலானதுகளுடன் இந்தத்திருமலையாகும் திருப்பதியும் ஒன்றாகையால், வைணவர்கள் தம்வாழ்நாளில் ஒருநாளாகிலும் இதை தரிசிக்கவேண்டும்.

திருப்பதி வேங்கடேசர் மஹாத்துவம்

## முற்றிற்று.

